தென்னிந்திய

# மஹாமஹோபாத்யாயர்கள் வரலாறு



# தென்னிந்திய
# மஹாமஹோபாத்யாயர்கள் வரலாறு



ஆசிரியர் :

குரு கைங்கர்ய மணி

A. குப்புஸ்வாமி அய்யர், B. A., B. T.



விலை ரூ. 5—00



எங்கெல்லாம் என்மனம் செல்லுமோ
அங்கெல்லாம் காணும் நினது திருவடியே
எங்கெல்லாம் என்சிரம் தாழுமோ
அங்கெல்லாம் காணும் நினது திருவடியே.



காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி சுவாமிகள்

உ

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

**ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடம்**

**காஞ்சீபுரம்.**

**முகாம் : ஹாலாஸ்ய க்ஷேத்ரம் (மதுரை)** **தேதி : 9—4—77.**



திருச்சிராப்பள்ளியிலிருக்கும் திருவிடைமருதூர் குருகைங்கர்யமணி ஸ்ரீ குப்புஸ்வாமி அய்யரால் தொகுக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ள **"தென்னாட்டு மஹாமஹோபாத்யாயர்களின் வாழ்க்கை வரலாறுகள்"** என்னும் நூலில், அத்வைத ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த மன்னார்குடி ராஜு சாஸ்திரிகள், பைங்காநாடு கணபதி சாஸ்திரிகள், கருங்குளம் கிருஷ்ண சாஸ்திரிகள் முதலியவர்கள், விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த திருப்புட்குழி கிருஷ்ண தாதாசார்யார், சேட்லூர் நரஸிம்மாசார்யார், ராயம்பேட்டை கிருஷ்ணமாசார்யார் முதலியவர்கள், த்வைத ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த ஸ்ரீமுஷ்ணம் ஸுப்பராயாச்சார், ஸேதுமாதவாச்சார், கும்பகோணம் காபே ராமசந்த்ராச்சார், முதலியவர்களுமான அனேக தென்னாட்டு மஹாமஹோபாத்யாய வித்வான்களின் வாழ்க்கை வரலாறுகள் படங்களுடன் அமைந்திருக்கின்றன.

ஆஸ்திகர்கள், முக்யமாக சாஸ்த்ரங்களைப் படிக்கும் வித்யார்த்திகள் இந்நூலின் மூலம் வித்வான்களின் வரலாறுகளை அறிந்துகொண்டு, தங்கள் சாஸ்த்ர அறிவையும் நற்குணங்களையும் அபிவிருத்தி செய்துகொண்டு, பரமாத்மாவின் அனுக்ரஹத்தினால் எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

**நாராயணஸ்ம்ருதி:**

# மதிப்புரை

ஸ்ரீ குருப்யோ நம :

[பண்டிதராஜ, சாஸ்த்ரரத்னகர, ந்யாயவேதாந்த வாகீச ப்ரஹ்மஸ்ரீ V. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள் அவர்கள் அருளியது]

தத்வ நூல்களான வேத சாஸ்த்ரங்கள் தழைத்திருப்பதே நம் பாரததேசத்தின் முக்யமான சிறப்பு. விக்டோரியா மஹாராணியாரின் ஆட்சிகாலத்தில் வேத சாஸ்த்ரங்களில் நிபுணர்களான பெரியோர்களைப் பழைய வழக்கப்படி 'மஹா மஹோபாத்யாய' என்னும் பிருதத்தை வழங்கிக் கௌரவிப்பது, ஆரம்பிக்கப்பட்டது. அக்காலத்தில் முதன் முதலாக அவ்விதம் கௌரவிக்கப்பட்ட பெரியோர்கள் 1. காசியில் இருந்த அரசினர் ஸம்ஸ்க்ருதக் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றிவந்த, ஆந்திரப் பிரதேசத்தவரான ஸ்ரீ மானவல்லி கங்காதர சாஸ்திரிகள் C. I. E., 2. மன்னார்குடி ராஜு சாஸ்திரிகள் என்று புகழ்பெற்ற ப்ரஹ்மஸ்ரீ தியாகராஜாத்வரீந்த்ரர்கள், 3. காஞ்சீபுரத்திலிருந்த திருப்புக்குழி க்ருஷ்ண தாதாசாரியார் என்ற மூவருமாவார்கள். அவர்களில் இரு பெரியோர்கள் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பது தமிழ்நாட்டிற்குப் பெருமையைத் தருவதாகும். இந்த பிருதத்தைப் பெற்றவர்களின் சிஷ்யப் பரம்பரையினர் பலரும் அந்த மஹாமஹோபாத்யாய பிருதத்தால் கௌரவிக்கப்பட்டிருக்கிறார்கள். நம் நாட்டிற்குப் பெருமையை அளித்துள்ள பெரியோர்களின் வரலாற்றை அறிவது மிகவும் அவச்யமானது.

நடமாடும் தெய்வமான காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ பரமாசார்யாளின் ஆக்ஞைப்படி அவர்களின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரமான, திருவிடைமருதூர் ஸ்ரீ A. குப்புஸ்வாமி அய்யர் அவர்கள் மஹாமஹோபாத்யாய பிருது பெற்ற தென்னாட்டுப் பெரியோர்களின் வரலாறுகளைச் சேகரித்து, தொகுத்தளித்து, இந்நூலைப் பிரசுரித்துள்ளார்கள். நம் நாட்டின் சிறப்பை எடுத்துக்காட்டும் இந்த நூல், தமிழ் நாட்டினரனைவராலும் உத்ஸாகத்துடன் வரவேற்கப்படுகிறது என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் விக்ஞாபனம் செய்துகொள்கிறேன்.

கும்பகோணம்
29—4—77

**V. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி**

உ

# முகவுரை

நம் நாட்டைப் பிரிட்டிஷ் அரசி விக்டோரியா மஹாராணி ஆட்சி செய்த காலத்தில் 1887-ஆம் ஆண்டு முதல் சற்றேறக்குறைய நாடு சுதந்திரமடைந்த காலம் வரை, சிறந்த ஸம்ஸ்க்ருத மஹாவித்வான்களுக்கு "மஹாமஹோபாத்யாய" என்ற பிருது, அதற்குரிய சில சின்னங்களுடனும், ஸன்மானத்துடனும் வழங்கப்பட்டு வந்தது. தற்காலத்தில் இந்த பிருது பெற்றவர் எவருமே உயிருடன் இல்லையென்றே கூறலாம். இத்தகைய மஹா வித்வான்களில் சில வடஇந்தியர்களையும், சில தென் இந்தியப் பெரியோர்களையும் கண்டு களிக்கவும், அவர்களுடன் நெருங்கி மரியாதை செலுத்தவும், பல் ஆண்டுகளுக்கு முன், அடியேனுக்கு வாய்ப்புகள் ஏற்பட்டன. கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் ஸம்ஸ்க்ருத ஆசிரியராகப் பணியாற்றிய மஹாமஹோபாத்யாய ராயம்பேட்டை க்ருஷ்ணமாசாரியார் அவர்களிடம் இரண்டு ஆண்டுகள் (கல்லூரியில் படித்துவரும் காலத்தில்) ஸம்ஸ்க்ருதம் படிக்க எனக்கு ஏற்பட்ட வாய்ப்பை ஒரு பெரும் பாக்யமாகவே நான் கருதுகிறேன்.

சுமார் நாற்பத்துமூன்று ஆண்டுகளுக்கு முன் காசி க்ஷேத்திரத்திலும், கல்கத்தா மாநகரிலும் சில மஹா மஹோபாத்யாயர்களான மஹாவித்வான்களைக் கண்டு களித்தேன். அவர்களுள் ஒருவர் ஸ்ரீ ஹரிதாஸ் பட்டாச்சார்யா. இவர் ஸம்ஸ்க்ருதத்தில் பல நூல்களை இயற்றியும் மஹாபாரதம் முழுவதிற்கும் வங்காளி மொழியில் உரை எழுதியும் வெளியிட்டுள்ளார். அவருடைய குமாரர் ஹேம்சந்த்ர பட்டாச்சார்யா, வடஇந்தியாவில் மஹா மஹோபாத்யாய பிருது பெற்ற மஹாவித்வான்களில் நூற்றுக்கதிகமானவர்களின் வாழ்க்கைக் குறிப்புகளைத்

தொகுத்து, பிரசுரித்துள்ளார். சென்ற ஆண்டில், அவர் என்னைத் தென்இந்தியாவில் திகழ்ந்த மஹாமஹோபாத் யாயர்களான வித்வான்களின் வாழ்க்கைக் குறிப்புகளைத் தொகுத்து ஆங்கிலத்தில் எழுதித்தரவேண்டுமெனக் கடிதம் எழுதினர். அவருடைய கடிதங்கள், அடியேனின் மனதில் தென்னுட்டில் வாழ்ந்து, புகழடைந்து, மஹாமஹோபாத்யாய பிருது பெற்றவர்களின் வாழ்க்கை வரலாறுகளை, முதலில், தமிழில் வெளியிடலாம் என்ற அவாவிற்கு வித்திட்டன.

இம்முயற்சியைத் துவக்குமுன் ஸ்ரீ காஞ்சீ காமகோடி ஸ்ரீ பெரியவர்களிடம், என் உத்தேசத்தை விக்ஞாபித்துக் கொண்டபோது அந்த தவத்திரு மஹானின் அனுக்ரஹமும் பெரும் கருணையுமே, அடியேனை, இம்முயற்சியில் மேலும் ஊக்குவித்ததுடன், பெயர்களையே கேட்டிராத பல வித் வான்களைப் பற்றிய விவரங்கள் கிடைக்கும்படியும் செய்தன.

இந்நூல் மிகச்சிறியதாயினும், இதிலுள்ள விவரங்களைச் சேகரிப்பது மிகவும் கடினமான பணியாயிற்று எனக் கூறிடின், அது மிகையாகாது. இப்புத்தகத்தில் இடம் பெற்றுள்ள மஹாவித்வான்களின் வாழ்க்கைக் குறிப்புகள் யாவும் பல பெரியோர்கள், நண்பர்கள், மஹாமஹோபாத் யாயர்களாகத் திகழ்ந்தவர்களின் ஸந்ததியார்கள், ஆகி யோர் கொடுத்துதவிய தகவல்களிலிருந்தும், பிற சில ஸஞ்சிகைகளிலோ, புத்தகங்களிலோ கிடைத்த விஷயங்களி லிருந்தும் சேகரிக்கப்பட்டனவேயன்றி, இதில் என்னுடைய தனிப்பட்ட முயற்சி, தகவல்களைச் சேகரித்து, புத்தக உரு வாக்கியது தவிர, வேறு ஒன்றுமில்லை. இதில் எனக்குப் பெரிதும் உதவியளித்து ஊக்கம் தந்தவர் பலர். அவர்கள் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அப்படிப் பேருதவியளித்தவர்களின் எண்ணிக்கை அதிகம். ஆகையால் அவர்களது பெயர்களை ஒரு பட்டியலாக அடுத்துத் தனியே கொடுத்துள்ளேன். இந்த சிறு நூலில் தவறுகள் ஏதும் காணப்படுமாயின் அவைகளுக்கான பொறுப்பு முழுதும் என்னுடையதே. மேலும் சில மஹா வித்வான்களின் வரலாறுகள் இடம்

பெருதும் போயிருக்கலாம். தவறுகளை மன்னித்து, என்னை ஆசீர்வதிக்கும்படி நூலைப்படிக்கும் நேயர்களை வேண்டுகிறேன்.

இந்த நூலைத் தொகுக்க ஆரம்பித்த காலத்தில் இந்த முயற்சி தேவைதானு என எனக்கு ஸந்தேஹம் ஏற்பட்டது. ஆனால் பின்னர், இச்சிறு நூலில் இடம் பெற்றுள்ள மஹான் களின் சிலருடைய ஸந்ததியார்களுக்கே அப்பெரியோர் களைப் பற்றிய விவரங்கள் தெரியாத நிலையை நான் கண்ட போது, என் ஐயம் மறைந்தது. எப்படியாவது முடிந்த வரை தகவல்களைச் சேகரித்துப் புத்தகத்தைப் பிரசுரிக்க வேண்டும் என்ற எண்ணம் தீவிரமாயிற்று.

இந்தப் புனிதப்பணியில் என்னை ஊக்குவித்த ஸ்ரீ காஞ்சீப் பெரியவர்களின் திருவடிகளில் எனது சாஷ்டாங்க வந்தனங்களுடன் இந்நூலை ஸமர்ப்பித்துக்கொள் கிறேன். இச்சிறு நூலுக்கு ஸ்ரீமுகம் வழங்கி அனுக்ரஹித் துள்ள காஞ்சீ ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளுடைய திருவடிகளுக்கு வந்தனங்களை ஸமர்ப்பித்துக்கொள் கின்றனன். இதற்கு மதிப்புரை வழங்கியுள்ள கும்பகோணம் அத்வைத ஸபா பண்டிதர், திருவியலூர் பண்டிதராஜ சாஸ்த்ர ரத்னுகர, ந்யாய வேதாந்த வாகீச, ஸ்ரீ V. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகளுக்கு எனது பணிவும், நன்றியும் கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள் கிறேன். மற்றும் எனது முயற்சி பயன்பெற உதவிய நண் பர்கள் யாவருக்கும் எனது மனமார்ந்த நன்றி.

திருச்சிராப்பள்ளி
4—5—77

அ. குப்புஸ்வாமி

## இப்புத்தகத்தைப் பிரசுரிப்பதில் உதவிய எமது நன்றிக்குரியவர்கள்

—o—

ஸ்ரீ V. ஜகதீச்வர சாஸ்திரிகள், சென்னை
,, T. V. விச்வநாதய்யர், ,,
,, டாக்டர் V. ராகவன், ,,
,, சிவராம தீக்ஷிதர் (முதல்வர், மயிலை ஸம்ஸ்க்ருதக்கல்லூரி) ,,
,, T. R. ராமகிருஷ்ண சாஸ்திரி, M.A., B.L., ,,
,, R. K. பார்த்தஸாரதி M.A. ,,
,, R. குருஸ்வாமி சாஸ்திரிகள், ,,
,, ராமஸ்வாமி சாஸ்திரி, (மாக்மில்லன் காலனி) ,,
,, K. நாகராஜன், (மந்தைவெளி) ,,
,, பண்டிதராஜ V. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள், கும்பகோணம்
,, கோமடம் S. S. அய்யங்கார், ,,
,, ராம ராவ், B.A., L.T., ,,
,, M. S. கிருஷ்ணமாசார்யார், ,,
,, A. கோபாலய்யர், (ஆசிரியர், காமகோடி) ,,
,, K. பட்டாபிராமன், திருவிடைமருதூர்
,, S. ராமசந்த்ர சாஸ்திரிகள் (வெள்ளூர்) பங்களூர்
,, S. ஸ்ரீனிவாஸ சர்மா, M.A., B.O.L., சிதம்பரம்
,, N. நாகராஜாசார், ஸ்ரீரங்கம்
,, S. V. ராதாகிருஷ்ண சாஸ்திரி திருச்சி
,, A. V. R. கிருஷ்ணஸ்வாமி ரெட்டியார், ,,

## ஸ்ரீ ராஜு சாஸ்திரிகள் என்ற தியாகராஜ தீக்ஷிதர்



தமிழ் நாட்டில் பொதுமக்கள் ஒரு சிறந்த அறிஞரின் பெயரையே சொல்லக் கூசுவர். பொதுவாகப் 'பெரியவர்' 'சாஸ்திரிகள்வாள்' என்றுதான் அம்மஹாவித்வானைப் பற்றி கூறுவார்கள். அவர்தான் தியாகராஜதீக்ஷிதர். அவரை 'ராஜு சாஸ்திரிகள்' என்றே பொதுஜனங்களறிவர்.

ராஜு சாஸ்திரிகள் அத்வைத வேதாந்தத்தின் பிரசாரத்தில் மிகப் புகழுடன் திகழ்ந்த அடயபலம் அப்பயதீக்ஷிதரின் வம்சத்தில் ஒன்பதாவது தலைமுறையினராகத் தோன்றியவர். கமலாலயமெனும் திருவாரூரையடுத்த கூத்தம்பாடி எனும் கிராமத்தில் (தஞ்சாவூர் ஜில்லா) இன்றைக்குச் சற்றேரக்குறைய 160 ஆண்டுகளுக்கு முன்னர் 1815-ஆம் ஆண்டு (யுவ வருஷம்) மே மாதம் 28-ஆம் நாள் இவர் பிறந்தார்.* இவருடைய தகப்பனார் மார்க்கஸஹாய அப்பாதீக்ஷிதர் (அப்பய தீக்ஷிதர்) வ்யாகர்ணத்திலும், தர்ம சாஸ்திரத்திலும் வல்லுனர். தந்தைதனயனுக்குத் திருவாரூர்

* (சிலநூல்களில் 1813 கி, பி, எனக் காணப்படுகிறது,

பதியின் சிவமூர்த்தியான தியாகராஜனின் பெயரைச் சூட்டினர். ஆனல் தாய் தந்தையரும் பிறரும் குழந்தையை 'ராஜு' என்ற செல்லப்பெயராலேயே அழைத்து வந்ததால் அப்பெயரே தியாகராஜருக்குக் கடைசி வரையில் வழக்கில் நீடித்து விட்டது.

ஏழாம் பிராயத்தில் உபநயனம் செய்விக்கப்பட்ட தியாகராஜர் வேதாத்யயனம் செய்ய ஆரம்பித்தார். இரண்டாண்டுகளுக்குப்பின்னர் அன்னர் தந்தையிடம் சிறிது சிறிதாகச் சில ஸம்ஸ்கிருதக் காப்பியங்களையும் வ்யாகர்ண ஸூத்ரங்களையும் கற்றுவந்தார். சிலஆண்டுகளுக்குப்பின்னர் தியாகராஜர் கும்பகோண நகரத்தில் தங்கி சின்னண்ணு தீக்ஷிதர் என்பாரிடம் வ்யாகர்ண மஹாபாஷ்யத்தைக்கற்று வந்தார். மேலும் அவ்வூரிலேயே வாழ்ந்த ரகுநாத சாஸ்திரி யாரிடம், பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தையும் கற்றறிந்தார். ஒருக்கால் இவர் தம் தாய்மாமன் வசித்து வந்த மன்னர் குடிக்குச் சென்று, மாமன் வீட்டில் சில நாட்கள் தங்கி யிருந்தார். ஒரு நாள் அங்கு சில காலமாக வசித்து வந்த நாராயணேந்த்ர ஸரஸ்வதீ என்ற துறவியைத் தரிசித்து வணங்கினர். துறவிக்கும் அறிஞ இளைஞருக்குமிடையே தொடர்பு ஏற்படவே, ராஜு அத்துறவியிடம் தர்க்க சாஸ் திரத்தைப் படிக்கத் துவங்கினர். இது முதல் நமது வித்வான் மன்னர்குடியிலேயே பலகாலம் வசிக்கலாயினர். ஸ்வயம்ப்ர காச ஸ்வாமிகளிடம் வேதாந்த சாஸ்திரம் பயின்ருர். மன்னர்குடியைச் சார்ந்த ஹரித்ராநதிப்பகுதியில் திகழ்ந்த கோபாலாசார்யாரிடம், 'முக்தாவளி', 'சதாதரீயம்' போன்ற நூல்களையும், சில வைணவ தத்வ நூல்களையும் படித்து முடித்தார். இவ்வாறு இளமையிலேயே சுமார் இருபது வயதிற்குள், ராஜு சாஸ்திரிகள் சிறந்த வித்வா ஞகக் காட்சியளித்தார்.

பயிற்சிகள் யாவும் முடிவடைந்தபின் சாஸ்திரிகள் மன்னர்குடியை விட்டு தம்மூருக்குச் செல்லத் தீர்மானித்தார்,

ஆனால் மன்னார்குடி வாசிகளான சில செல்வந்தரும், மற்றும் பலரும் இத்தகைய மாபெரும் இளம் அறிஞர் தங்கள் ஊரை விட்டுச்செல்வதை விரும்பாது, அன்னாரை மன்னார்குடியி லேயே எப்போதுமிருக்க வேண்டுமெனப் பலவாறுக வேண்ட, சாஸ்திரிகளும் அதற்கிசையவே, தியாகராஜர் அன்றுமுதல் மன்னார்குடி ராஜு சாஸ்திரிகளாக மன்னார்குடியிலேயே வாழ்ந்து வந்தார். இன்றும் ' மன்னார்குடி ராஜு சாஸ்திரி களாகவே ' மக்களின் மனதில் திகழ்ந்து வருகிறார்.

1836-ஆம் ஆண்டில் ஆண்டுதோறும் புதுக்கோட்டை யில் நடைபெற்று வந்த நவராத்திரி ஸதஸுக்கு, புதுக் கோட்டை மன்னரால் சாஸ்திரிகள் அழைக்கப்பட்டார். ஸதஸில் கூடியிருந்த குப்பாசார்யார் போன்ற மாபெரும் வித்வான்கள் இருபது வயதே பூர்த்தியாகிய ராஜு சாஸ்திரி களினால் வாதில் வெல்லப்பட்டனர். சிலஆண்டுகள் கழிந்தன. அநேக இளைஞர்கள் ராஜு சாஸ்திரிகளிடம் கல்வி பயில வந்து கூடினர். சாஸ்திரிகளின் முக்ய சீடர்கள் பின்வருபவ ராவர்:-

(1) பிற்காலத்தில் சிறந்த ந்யாய சாஸ்த்ர வித்வானு கவும், மஹாமஹோபாத்யாய விருது பெற்றவருமான ஹரி ஹர சாஸ்திரி (2) சிறு வயதிலேயே புகழும் சிறந்த அறிவும் அடைந்து, பல நூல்களை இயற்றிய பைங்காநாடு கணபதி சாஸ்திரி (3) கிருஷ்ணமாசார்யார், (4) நடுக் காவேரி ஸ்ரீனிவாஸ சாஸ்திரி (5) பின்னர் மஹாமஹோ பாத்யாய விருது பெற்ற பழமார்நேரி ஸுந்தர சாஸ்திரி (6) ராமாயாணச் சொற்பொழிவுகளில் பிற்காலத்தில் சிறந்து விளங்கிய பருத்தியூர் கிருஷ்ண சாஸ்திரி (7) ஆங்கரை ஸுப்பராய சாஸ்திரி (8) ஆந்திர தேசத் தைச் சேர்ந்த அக்நிசித் ராமகிருஷ்ண சாஸ்திரி. ராஜு சாஸ்திரிகளிடம் வேதாந்த பாடம் கேட்டவர்களுள் சில துறவிகளும் உண்டு. அவர்களுள் முக்கியமானவர் மஹாதேவ ஆச்ரமியாம்.

1885-ஆம் ஆண்டில் ராஜு சாஸ்திரிகள் ஸோமயாகம் செய்து புகழடைந்தார். 1887-ஆம் ஆண்டில் லண்டனில் இங்கிலாந்து மஹாராணி விக்டோரியாவின் ஆட்சியின் பொன்விழா நடத்தப்பட்டது. அதையொட்டி இந்தியாவில் பல நகரங்களில் அவ்விழாக் கொண்டாடப்பட்டது. அந்த ஸமயத்தில் சாஸ்திரிகளவர்களுக்கு 'மஹாமஹோபாத்யாய' விருது பிரிட்டிஷ் இந்திய ஆட்சியினரால் வழங்கப் பட்டது. ராஜு சாஸ்திரியாரின் மேதாவிலாஸத்தையும், அவரிடம் மக்களுக்கு இருந்த பெரும் நன்மதிப்பையும் அறிந்த தஞ்சைக் கலெக்டர் (ஆங்கிலேயர்) மன்னார்குடி சென்று சாஸ்திரியாருக்கு 'மஹாமஹோபாத்யாய' விருதை ஸமர்ப்பித்ததாகத் தெரிகிறது.

1895-ஆம் ஆண்டில் கும்பகோணத்தில் காஞ்சி காமகோடி பீடத்தின் அறுபத்தாருவது ஆசார்யர்களாக விளங்கிய ஸ்ரீமத்சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் ஆசியுடன் 'அத்வைத ஸபை' என்ற ஒரு நிறுவனம் துவக்கப்பட்டது. அது முதல் ஏழாண்டுகள் அந்த ஸபையின் வளர்ச்சியிலும், பிரதி வருட ஸதஸ்களிலும் சாஸ்திரியார் முக்கியப் பங்கு கொண்டு ஸபையை ஊக்குவித்தார்கள். 1902-ஆம் ஆண்டுக் கடைசியிலிருந்து இப்பெரியாரின் உடல் நிலை சீர்குலையத் தொடங்கியது. தக்க சிகிச்சையளித்தும் அவர் ஆரோக்யத்தைத் திரும்பப் பெறவில்லை. அவர் 1903 ஆண்டு மார்ச் மாதம் நான்காவது நாள் (சுபக்ருத் ஆண்டு மாசி மாதம் 21-ஆம் நாள்) புதன்கிழமை சுக்லபக்ஷ சஷ்டி நள்ளிரவில் இறைவனடி சேர்ந்தார்.

இருபத்திரண்டாம் வயதிலேயே ராஜு சாஸ்திரிகளுக்கு திருமணம் நடந்தேறியது. ஆனால் சில ஆண்டுகளில் முதல் மனைவியை இழந்ததால் ஸுந்தரி என்ற பெண்ணை இரண் டாம் மனைவியாகக் கொண்டார். இவருக்கு இம்மனைவியிடம் இரண்டு பெண் குழந்தைகளே ஏற்பட்டனர். 1866-ஆம் ஆண்டில் தன் வயது முதிர்ந்த தந்தை மார்க்கஸஹாய அப்பயதீக்ஷிதரின் விருப்பப்படி சாஸ்திரியார் தன் தம்பியின்

மக்ஞன நீலகண்டனே ஸ்வீகாரம் செய்துகொண்டார். உற்வினரிடமும் நண்பர்களிடமும் மிகவும் அன்புடன் பழகுவது சாஸ்திரியாரின் சிறப்பியல்புகளில் ஒன்று. அத்வைத வேதாந்தத்தைக் கற்பிப்பதில் இவர் சிறந்த வல்லுனர். தர்மசாஸ்திரத்தில் மிகப் பெரிய அறிஞரெனத் தென்னுடு முழுவதிலும் புகழ்பெற்றவர்.

ஸம்ஸ்கிருத மொழியில் முப்பது நூல்கள் இயற்றியவர் சாஸ்திரியார். சாந்தோக்யோபநிடதத்தின் ஸாரத்தைக் கொண்ட 'ஸத்வித்யா விலாஸம்', நியாய பாஸ்கரமெனும் வைணவ தத்வ நூலின் கருத்தை விமர்சித்து, கண்டிக்கும் 'ந்யாயேந்துசேகரம்'; 'ஸாமருத்ர ஸம்ஹிதா பாஷ்யம்', 'சிவதத்வ விவேக தீபிகை', திருவாரூர் ஸ்ரீ தியாகராஜரின் தோத்திரமாகிய 'த்யாகராஜஸ்தவம்', 'வேதாந்த வாத ஸங்ரஹம்'—போன்றவை சாஸ்திரியார் இயற்றிய முக்ய நூல்களாம். இப்பெரியார் மண்ணுலகை நீத்து எழுபதாண்டுகளுக்கு மேலாயினும் அன்னரின் புகழும் பெயரும் தமிழ் நாட்டில் எங்கும் ஒலித்துக்கொண்டிருக்கின்ற தென்பது மறுக்க முடியாத உண்மை.



# ஸ்ரீ கிருஷ்ண தாதாசாரியார்

காஞ்சீபுரமெனும் திவ்யத் திருப்பதியிலும், அதைச் சுற்றியுமுள்ள ஆழ்வார்களின் மங்களாசாஸனம் பெற்ற 14 விஷ்ணு க்ஷேத்ரங்களுள் காஞ்சிக்கு வெளியே ஏழுமைல் தென் மேற்கில் (தொண்டை நாட்டில்) திருப்புட்குழி என்ற பாடல் பெற்ற வைணவத் திருப்பதி யொன்றுள்ளது. இப்புனிதச் சிற்றூரில் 1823-ஆம் ஆண்டில் கிருஷ்ணதாதாசாரியார் என்ற மஹாவித்வான் தோன்றினர். இவருடைய தந்தை யார் வேங்கட குரு என்னும் கோபால தாதாசாரியார். இளமையிலே கிருஷ்ணதாதாசாரியார் நல்ல மதிநுட்பமும் ஞாபகசக்தியுமுடையவராகக் காணப்பட்டார். இவரை 'அய்யா' என்ற பெயராலேயே அழைப்பது வழக்கமாம்.

உபநயனம் செய்விக்கப்பட்டபின் திவ்யப்ரபந்தங்களைக் கற்ருர். பின்னர் கோபாலதாதாசாரியாரிடம் ஸாஹித்ய சாஸ்திரத்தைப் படித்துத் தேர்ச்சி பெற்ருர். திவப்ரதீப வேங்கடாசாரியார் என்ற அறிஞரிடம் ந்யாய சாஸ்திரத்தைப் பயின்ருர். ஜடப்ரோலுரங்காசார்யாரிடம் வியாகர்ணம் படித்தார். பிறகு மௌஸாலகட்ட ஸ்ரீனிவாஸராகவாசாரி யார் என்ற வித்வானிடம் மீமாம்ஸா சாஸ்திரத்தைக்கற்ருர். பின்னர் தாதாசாரியார் ஸ்ரீரங்கத்தையடைந்து ஸ்ரீமத் பெரியாண்டவன் ஸ்ரீனிவாஸ யோகீந்த்ர ஸ்வாமியிடம் விசிஷ்டாத்வைத வேதாந்த பாடம் படித்தார்.

இப்படி பலவித சாஸ்திரங்களிலும் தேர்ச்சி பெற்ற 'இவர்' நெல்லூருக்கருகாமையிலுள்ள வேங்கடகிரி ஸமஸ் தானத்தில் சில ஆண்டுகள் ஆஸ்தான வித்வானுகத் திகழ்ந்தார். தனது பிற்காலத்தைக் காஞ்சியம்பதியிலும் திருபுட்குழியிலுமாகக் கழித்தார். காஞ்சீபுரத்தில், சிறிது காலம் ஸ்ரீவரதராஜப் பெருமானின் ஆலய நிர்வாக அதிகாரி யாகக் கைங்கர்யம் செய்தார்.

1887-ஆம் ஆண்டு பிரிட்டிஷ் அரசியாகவும், இந்திய தேசத்தின் சக்ரவர்த்தினியாகவும் திகழ்ந்த விக்டோரியா மஹாராரணியின் ஆட்சியின் பொன் விழா நடந்தபோது, கிருஷ்ணதாதாசாரியாருக்கு இந்திய அரசு 'மஹாமஹோபாத்யாய' என்ற விருதை வழங்கிக் கௌரவித்தது. தமது அறுபத்தாருவது வயதில் 1889-ஆம் ஆண்டில் இவ்வறிஞர் பரமபதமடைந்தார்.

இவர் மைஸூர் ராமசாஸ்திரியார் இயற்றிய 'ஸத்ப்ரதிபக்ஷ' என்ற நூலைக்கண்டித்து 'சதகோடி கண்டனம்' (பராமுகசபேடிகா) என்ற நூலை இயற்றியுள்ளார். குமாரில பட்டர் எழுதிய 'பட்டபாத வார்த்திகத்தின்' அதிகரணங்களின் ஸாரத்தை வடித்து இவ்வறிஞர் எழுதிவைத்திருந்த 'பாட்டஸாரம்', என்ற நூல் இவருடைய மறைவுக்கு இருபத்திரண்டு ஆண்டுகளுக்குப்பின், 1912-ஆம் ஆண்டில் ஸ்ரீரங்கத்தில் அக்காலத்தில் பிரசுரமாகி வந்த 'ஸஹ்ருதய' எனும் ஸஞ்சிகையில் தொடர்ந்து பிரசுரிக்கப்பட்டது.



# ஸ்ரீ ஹரிஹர சாஸ்திரிகள்



தமிழ் நாட்டின்கண் வைணவப் பதிகளில் ஒன்ருன ராமநாதபுரம் ஜில்லாவிலுள்ள திருக்கோஷ்டியூரில் பத்தொன்பதாம் நூற்ருண்டின் மத்தியில் ஹரிஹர சாஸ்திரிகள் பிறந்தார். இவருடைய முன்னேர்கள் வேதவித்பன்னர்கள். இருபது வயது வரை பிறந்த ஊரிலேயே வசித்து, தன்னுடைய பாட்டனரிடம் வேதம் பயின்ருர். பின்னர் அவ்வூரிலேயே வேதாந்தாசாரியார் என்பவரிடம் காவ்ய நாடகங்களைப் படித்து, ஓரளவு தர்க்கமும் வ்யாகர்ணமும் பயின்ருர். தமது இருபத்தொன்ரும் வயதில் திருவிடைமருதூருக்குச் சென்று, அண்ணு வாஜபேயர் என்ற வித்வானிடம் வ்யாகர்ண சாஸ்திரத்தைப் படித்து முடித்தார். அதன் பின்னர் மன்னர்குடி சென்று பெரியவர்களான ராஜு சாஸ்திரிகளிடம் பூர்வ மீமாம்ஸையையும் உத்திர மீமாம்ஸையையும், ஸ்ம்ருதிகள், புராணங்கள், ச்ரௌதம் முதலியவைகளையும் கற்றறிந்தார்.

பிறகு சாஸ்திரியார் மன்னர்குடியிலிருந்து கும்பகோணம் வந்து சேர்ந்தார். ஆங்கு ப்ரஹ்மானந்தீயம், ப்ரஹ்ம வித்யாபரணம், ஸித்தாந்த பிந்து, ப்ரம்ஹஸூத்ர வ்ருத்தி, போன்ற அத்வைத நூல்களைப் பரிசோதித்து அச்சிடச்

செய்தார். இப்படி அச்சிடப்பட்ட நூல்களில் அத்வைத ஸபையினால் ப்ரசுரிக்கப்பட்ட ''ந்யாயேந்துசேகரம்'' என்ற நூலின் இரண்டாம் பகுதி மிக முக்யமானது. கும்பகோணத்தில் தங்கிய காலத்தில், சாஸ்திரிகள் அத்வைத ஸபையின் முக்கிய ஆய்வாளராக இருந்து வந்தார். ஸபையின் வளர்ச்சியில் இவருக்கு முக்கியப் பங்கு உண்டு. காளஹஸ்தி அத்வைத ஸபையிலும் சுமார் பத்தாண்டுகளுக்கு முக்கிய பரீக்ஷகராக விளங்கினார்.

பின்னர் சாஸ்திரியார் சிதம்பரத்தில் ஒரு ஸம்ஸ்க்ருத பாடசாலையின் ஆசிரியராக இருந்து வந்தார். இக்காலத்தில் தென்னாட்டின் பல பகுதிகளிலிருந்து பல இளைஞர்கள் சிதம்பரம் வந்து தங்கி, ஹரிஹர சாஸ்திரிகளிடம் கல்வி பயின்றனர். இவர்களுள் தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகளும், கேரளத்தைச் சேர்ந்த நூரணி அனந்தகிருஷ்ண சாஸ்திரிகளும், கருங்குளம் கிருஷ்ண சாஸ்திரிகளும், இஞ்சிக்கொல்லை ஜகதீச சாஸ்திரிகளும், போலகம் ராமா சாஸ்திரிகளும் முக்கியமானவர்கள். சிதம்பர வாஸத்திற்குப் பின், ஹரிஹர சாஸ்திரிகள் மைஸூர் ராஜ்யத்தில் ஒருகல்லூரியில் வேதாந்த ஆசிரியராகப் பணியாற்றினார். அங்கேயே பல ஆண்டுகள் சாஸ்திரியார் வசித்துவந்தார்.

இவருக்கு இந்திய அரசாங்கம் 'மஹாமஹோபாத்யாய' பட்டத்தை வழங்கியது. இவருடைய போதனா முறையை பிற வித்வான்களும், இவருடைய சீடர்களும் பெரிதும் போற்றுவர். இவருடைய முயற்சியால்தான் பல அத்வைத க்ரந்தங்கள் அச்சிட்ட நூல்களாக உருக்கொண்டன.

---

# ஸ்ரீ ராமஸுப்பா சாஸ்திரிகள்



**கா**விரியின் கழிமுகப் பிரதேசத்தில் கும்பகோண நகரத்தை அடுத்து கிழக்கே நான்கு மைல் தூரத்தில், காவிரிநதியின் வடகரையில், திருவியலூர் என்ற தேவாரப் புகழ்பெற்ற சிவத்தலம் ஒன்று உள்ளது. இவ்வூர் பல மஹான்களை உலகிற்கு அளித்த பெருமை உடையது. ஸ்ரீதர வெங்கடேச ஆரியர் என்ற சிறந்த பக்தர் உதித்த ஊர் இதுவே. இவ்வூர் தற்காலம் திருவிசநல்லூர் எனப்படும். பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் இவ்வூரிலே ராமசங்கர சாஸ்திரி என்ற ஒரு கற்றறிஞர் இருந்தார். அவருக்கு மகனுகப் பிறந்தவரே ராமஸுப்பா சாஸ்திரிகள். இவருடைய இயற்பெயர் ராமஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி.

சிறு வயதிலேயே வேதாத்யயனம் செய்து முடித்தார். பிறகு சாஸ்த்ரப் பயிற்சியில் ஈடுபட்டார். மீமாம்ஸா சாஸ்திரத்தைக் கற்பதில் ஆர்வம் கொண்டு அதில் அதிகமான தேர்ச்சியைப் பெற்றுர். இவர் அத்வைதியான போதிலும் விஷ்ணுவிடம் அதிக பக்தி கொண்டு, மற்ற அறிஞர்களால் வைஷ்ணவராகவே மதிக்கப் பட்டார். இவர் யாகம் முதலிய

ச்ரௌத கர்மாக்களை வெறுத்தார். யாகம் செய்வதைக் கண்டித்து "பசுமாரக மர்தனம்" என்ற ஒரு நூலையே எழுதியுள்ளார்.

தம்மிடம் கல்விபயில வந்த பலருக்கு மீமாம்ஸா சாஸ்திரத்தையும், அத்வைத க்ரந்தங்களையும் கற்பித்து வந்தார். இவரிடம் கல்விபயின்ற திருவிசநல்லூரைச் சேர்ந்த வேங்கட ஸுப்பா சாஸ்திரிகள், நீலமேக சாஸ்திரிகள் ஆகியோர் முக்ய மானவர். இவ்விருவரும் சாஸ்திரிகளிடம் சிறந்த மதிப்பும் பக்தியும் வைத்திருந்தனர். சாஸ்திரிகள் மிகவும் சுதந்திர மான மனப்பான்மை உடையவர். இவர் வெகுமானங்களையோ, ஸத்காரங்களையோ உத்தேசித்து எங்கும் செல்வதில்லையாம். இவர் விசிஷ்டாத்வைதத்திலும் சிறந்த அறிவு உடையவர். எனவே நாவல்பாக்கம் வரதாசாரியார், பண்டித தீக்ஷிதாசாரியார் போன்ற வைஷ்ணவர்களும் இவரிடம் படித்தார்கள். இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இவருடைய புகழ் தமிழ் நாடெங்கும் பரவியது. இவர் பட்டங்களையும் புகழையும் முயற்சித்து பெறவில்லையாயினும் இவருடைய மாணுக்கர்களின் முயற்சியாலும், ஆன்ருேர் சிலரின் முயற்சியாலும் இவருடைய வாழ்நாளின் கடைசியில் மஹா மஹோபாத்யாயா பட்டம் இந்திய அரசாங்கத்தாரால் இவருக்கு அளிக்கப்பட்டது.

ஸமஸ்க்ருத மொழியில் நூல்களை எழுதுவதில் இவர் வல்லுனர், பல நூல்களை இயற்றியுள்ளார். அவற்றுள் முக்யமானவை:- சாஸ்த்ரைக்யபங்கவாதம், சந்த்ரிகா கண்டனம், ஆனந்தாாத்த வாதம், ஓம்கார நாதார்த்தம், நிர்விசேஷ வாதம், ப்ரஹ்ம ஸூத்ர தத்வார்த்த விலாஸம், பாஷ்யானந்த ப்ரகரணம், வேதாந்த ஸூத்ர முக்தாவளி டீகா, தத்வார்த்த விபோதனம், விஷ்ணுதத்வ ரஹஸ்யம், ப்ரஹ்மவித்யா முக்தாபலம், பாஷ்ய காம்பீர்ய நிர்ணயம், அதர்வசிரோபனிஷத் விலாஸம், கைவல்யோபனிஷத் விலாஸம், ச்வேதாச்வதரோபனிஷத் விலாஸம், ஜகத்கரணதா விலாஸம். தர்ம விவேசனம், ரகுவீர வ்ருத்த ஸ்தவம்,

# ஸ்ரீ பாலகிருஷ்ண சாஸ்திரிகள்



**பா**லகிருஷ்ணசாஸ்திரிகள் சுமார் பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் திருவையாறு எனும் தஞ்சை ஜில்லாவைச்சேர்ந்த சிறப்புற்ற சிவக்ஷேத்ரத்தில் பிறந்தார். தகப்பனுரின் பெயர் ப்ரணதார்த்திஹர சாஸ்திரிகள். தாயார் பார்வதி அம்மாள். இளமையிலேயே கல்விபயில ஆரம்பித்தார் பாலகிருஷ்ணர். ஒருமிகவும் கற்றுணர்ந்த ஸன்யாஸியிடம் இவர் வேதாந்த அறிவுபெற்ருர். பின்னர் தஞ்சையையடுத்த வண்ணுற்றங் கரையில் வாழ்ந்து வந்த ஸ்ரீநிவாசஸாசாரியார் என்பவரிடம் நியாய சாஸ்திரப் பயிற்சி பெற்ருர். மருதஞ்சேரி குப்புஸ்வாமி சாஸ்திரிகளிடம் மீமாம்ஸா சாஸ்திரம் படித்தார்.

இவர் வேதாத்யயனம் செய்தவர். பல மறைந்த யாகங்களைப் புனருத்தாரணம் செய்து, தானும் ஸோம யாகம் போன்ற வேள்விகளைச் செய்தார். இவர் வேதாந்த பாடம்

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

அலங்கார சாஸ்த்ர ஸங்க்ரஹம், ஸர்வ வேதாந்தஸர்வமத தத்வார்த்த விலாஸம், முதலியவை. இவையன்றி பகவத்கீதைக்கு ஒரு விரிவுரையும் பாட்டதீபிகைக்கு பாட்ட கல்ப தரு என்ற ஒரு விரிவுரையும் எழுதியுள்ளார்.

கற்பிப்பதில் வல்லுனர். இவரிடம் வேதாந்தம் படித்த சீடர்களுள் முக்கியமானவர் மல்லே ராமகிருஷ்ண சாஸ்திரி, குண்டூர் நரஸிம்ஹ சாஸ்திரி, கோதாவரி ஸதாசிவ சாஸ்திரி, பின்னர் மஹாமஹோபாத்யாயப் பட்டம் பெற்ற மண்டகுளத்தூர் சின்னஸ்வாமி சாஸ்திரி, வரஹூர் வேங்கடராம சாஸ்திரிகள் முதலியோர். இவர் இயற்றிய சிலநூல்களுள் முக்யமானது திருவிசநல்லூர் ராமஸுப்பா சாஸ்திரிகளால் யாகம் செய்வதைக் கண்டித்து எழுதப்பட்ட பசுமாரகமர்த்தனம், என்னும் நூலைக் கண்டித்து எழுதிய " ஸஜ்ஜனரஞ்ஜனம்", என்பதாம்.

இவர் சில ஆண்டுகள் புதுக்கோட்டை ஸமஸ்தானத்தில் தானதிகாரியாகத் திகழ்ந்தார். பின்னர் திருவையாற்றில் வசித்துவந்தார். இறுதிக் காலத்தில் துறவறம் பூண்டார். விரோதிக்ருத் வருஷம் சித்திரை மாதம் (1911 மே மாதம்) க்ருஷ்ணபக்ஷ அஷ்டமியன்று ஸித்தியடைந்தார். அன்னாரின் ஸமாதி திருவையாற்றில் ஸ்ரீ தியாகப்ரஹ்மத்தின் அதிஷ்டானத்தின் பின்புறப் பகுதியில் உள்ளது. அன்றுடம் பூஜை செய்யப்பட்டு வருகிறது. இவருடைய குமாரர் சிறந்த வித்வானாக விளங்கிய ஸ்ரீ விச்வநாத சாஸ்திரிகள். கும்பகோணத்தில் 1895.ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட அத்வைத ஸபையுடனும், காஞ்சி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் மடத்துடனும் நெருங்கிய தொடர்புகொண்டவர் பாலகிருஷ்ண சாஸ்திரிகள். இவருக்கு இந்திய அரசாங்கம் மஹாமஹோபாத்யாய பிருதை யளித்து கௌரவித்தது.



# ஸ்ரீ வேங்கடஸுப்பா சாஸ்திரிகள்



சோழ நாட்டில் தஞ்சை ஜில்லாவில் கும்பகோணத்தை அடுத்து உள்ள ஸஹாஜிபுரம் எனும், கங்கையைத் தம் வீட்டுக் கிணற்றில் வரவழைத்த ஸ்ரீதர ஐயாவாள் தோன்றிய திருவிசநல்லூரில், ஹோய்ஸல கர்னுடகர் எனும் ஸ்மார்த்த வகுப்பைச் சார்ந்த அந்தணர் குலத்தில் ஸ்ரீ ராயலு வேங்கட ராம சாஸ்திரிகள் என்ற அந்தணருக்கும் காமாக்ஷியம்மாளுக்கும் கி. பி. 1864-ஆம் ஆண்டில் வேங்கட ஸுப்பா சாஸ்திரிகள் பிறந்தார். வேங்கட்ராம சாஸ்திரிகள் ஆச்வலாயன ஸூத்ரத்தைச்சேர்ந்தவர். முறைப்படி ருக்வேதம் அத்யயனம் செய்தவர். அக்காலத்தில் காஞ்சி காமகோடிமடத்தின் ஆஸ்தான வித்வானுக இருந்தவர். மேலும் திருவனந்தபுரம் மஹாராஜாவினுல் கௌரவிக்கப்பட்டவர். வேங்கடஸுப்பா சாஸ்திரிகளின் தாயார்புகழ்பெற்ற தஞ்சை மந்திரி, கோவிந்த தீக்ஷிதரின் வம்சத்தைச்சேர்ந்த வாஞ்சேச்வர யஜ்வா (குட்டி சாஸ்திரி) என்ற பிரசித்தி பெற்ற கவிஞரின் குமாரி.

சாஸ்திரியவர்கள் தமது பால்யத்தில் தகப்பனுரிடத்திலேயே ருக்வேதத்தை அங்கங்களோடு அத்யயனம் செய்தார்.

அக்காலத்தில் தஞ்சை ஜில்லாவில் பிரஸித்தியாக விளங்கிய வித்வான் ஸ்ரீ ராமச்சந்திர சாஸ்திரிகளிடம் காவ்ய, நாடக அலங்காரங்களையும், ஸ்ரீ மஹாலிங்க சாஸ்திரிகளிடம் நியாய சாஸ்திரத்தையும், மஹா மஹோபாத்யாய ராமஸுப்பா சாஸ்திரிகளிடம் மீமாம்ஸா சாஸ்திரத்தையும், விசிஷ்டாத்வைதத்தையும் முறையாகக் கற்றுவந்தார். பாடம் கேட்பதுடன் குருசிச்ரூஷையும் செவ்வனே செய்து, குருமார்களின் பூர்ண அநுக்ரஹத்தைப்பெற்றார். அத்துடன் காமகோடி மடத்திற்கு விஜயம் செய்யும் மஹா பண்டிதர்களின் வாக்யார்த்தங்களைக் கேட்டறியும் வாய்ப்புகள் ஏற்பட்டது. இவருடைய ஸமகாலத்து வித்தியார்த்திகளில் சிலர் பின்னர் பிரஸித்தியடைந்த ஸ்ரீ நீலமேக சாஸ்திரிகள். கொச்சி ராஜாவின் அரண்மனையில் புகழுடன் வித்வானாகத் திகழ்ந்த ஸ்ரீ பண்டிததீக்ஷிதாசாரியர், நாவல்பாக்கம் வரதாச்சாரியார் ஆகியோராவர்,

சென்னை திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி ஸந்நிதியில் இன்றும் தொடர்ந்து நடைபெற்று வருகிற வேத வேதாந்த வர்த்தினி ஸபையில், 1888-ம் வருஷ பரீட்சைக்கு சிஷ்யர்களுடன் வரும்படி சாஸ்திரியவர்களின் குருநாதர் ராமஸுப்பா சாஸ்திரிகளுக்கு அழைப்பு வந்தது. ஆனால் ஸ்ரீ ராமஸுப்பா சாஸ்திரிகள் மிகவும் நியமம் உள்ளவர். ஆதலால் அவ்வளவு தூரம் பயணம் செய்வதை விரும்பவில்லை. தமது சிஷ்யர்களை அனுப்புவதாக எழுதிவிட்டு மீமாம்ஸா பரீக்ஷைக்கு ஸ்ரீ வேங்கடஸுப்பா சாஸ்திரிகளை அனுப்பிவைத்தார்கள். ஸபையை அடைந்த சாஸ்திரிகள் சென்னைக்கு முதல் முதலாக வந்திருந்ததாலும், ஸபையில் குழுமியிருந்த வித்வான்களைப் பார்த்தும் பிரமித்து விட்டார். இருந்தாலும் குருநாதரை நினைத்து தைரியத்துடன் கொணர்ந்திருந்த கடிதங்களையும், கிரந்தங்களையும் பரீட்சாதிகாரிகளிடம் சமர்ப்பித்துவிட்டு, ஓர் ஓரமாக அடக்கத்துடன் அமர்ந்துகொண்டார். சாஸ்திரிகளின் வினயத்தைக் கண்டு அதிசயித்த பரீக்ஷாதிகாரிகள் இவர் என்ன சொல்லப் போகிறார் என்றே நினைத்துவிட்டார்கள், பரீக்ஷையில்

பரீக்ஷாதிகாரிகளாயிருந்த வைஷ்ணவ வித்வான்கள் சாஸ்திரிகளைப் பலவிதங்களில் பரீக்ஷித்தார்கள். பல சிக்கலான கேள்விகளுக்குச் சாஸ்திரிகள் தக்க பதில் அளித்து வெற்றிபெற்ருர். அதன் காரணமாக அச்சபையார் தமது வழக்கத்திற்கும் அதிகமாக சாஸ்திரிகளுக்கு விசேஷ வெகுமதிகளை அளித்ததுடன், அவருடைய குருவான ஸ்ரீ ராமஸுப்பா சாஸ்திரிகளுக்கும் விசேஷ வெகுமதிகளைக் கொடுத்து அனுப்பி கௌரவித்தார்கள். இக்காலத்தில் மஹாலக்ஷ்மி என்ற திருவிசநல்லூர் பெண்ணையே வேங்கடஸுப்பா சாஸ்திரிகள் மணந்தார்.

மைஸூர் அரசரால் நடத்தப்பட்டு வந்த ஸபைக்கு 1892-ஆம் வருஷம் நம் சாஸ்திரிகள் பூர்வ மீமாம்ஸையில் பரீக்ஷை கொடுக்கச் சென்ருர். புத்திகூர்மையுள்ள வேங்கடஸுப்பா சாஸ்திரிகள் இக்கடினமான பரீக்ஷையில் வெற்றி பெற்ருர். இவரைப் பரீக்ஷாதிகாரியாகவும் நியமனம் செய்தார்கள். பின்னர் புதுக்கோட்டை ஸமஸ்தானத்தினுலும், திருவனந்தபுரத்து அரசராலும், கொச்சி ராஜ ஸபையிலும் சாஸ்திரியார் கௌரவிக்கப்பட்டார்.

இப்படிப்பல ஸமஸ்தானங்களால் நம் சாஸ்திரிகள் கௌரவிக்கப்பட்டாலும், பாரம்பரியமாய் இவரின் முன்னோர் காஞ்சீ காமகோடி மடத்தின் வித்வானுக இருந்து வந்ததால் அதை அனுசரித்து அம்மடத்தின் ஆஸ்தான மஹாவித்வானுக நியமனம் செய்யப்பட்டார்.

1906-இல் கனம் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்கள் சென்னையில் தம்மால் ஸ்தாபிக்கப்பட்ட ஸம்ஸ்க்ருதக் கல்லூரிக்கு மீமாம்ஸா, தர்ம சாஸ்திரம் முதலியவற்றைப் போதிப்பதற்குத் தக்க ஆசிரியரைத் தேடிக்கொண்டிருந்தார்கள். நம் சாஸ்திரிகளை அப்பதவிக்கு கல்லூரிக்கு வழங்கி உதவக்கேட்டு ஸ்ரீ மடத்திற்கு விஞ்ஞாபனம் செய்து கொண்டார்கள். ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயரின் விஞ்ஞாபனத்தைக் காமகோடி பீடாதிபதிகள் ஏற்று, நம் சாஸ்திரிகளை அக் கல்லூரிக்கு

அனுப்பிவைத்தார்கள். சாஸ்திரிகளும் குருவின் ஆணையை ஏற்று சென்னைக் கல்லூரிக்குச் சென்றார்கள். கல்லூரியின் பாட போதனையையும் கவனித்துக்கொண்டு, அவ்வப்போது ஸ்ரீ மடத்துக் கைங்கர்யங்களையும் செய்து வந்தார்கள். 1918-இல் கல்லூரியின் தலைமைப்பதவியையும்(பிரின்சிபால்) ஏற்றார்கள். பின்னர் தம் ஆயுட்காலம் முழுமையும் அப் பதவியை வகித்துவந்தார்கள். 1916-ஆம் வருஷம் சென்னை ஸர்வகலாசாலை சிரோமணி பட்டப்படிப்பு ஏற்படுத்தியபோது அதன் பரீக்ஷாதிகாரியாகவும், காசி ஸர்வகலாசாலை, புதுக் கோட்டை ராஜஸபை, மைஸூர் ராஜஸபை, கும்பகோணம், திருச்சிஆகிய நகரங்களின் அத்வைத ஸபைகள், இவைகளின் பரீக்ஷாதிகாரியாகப் பணி புரிந்திருக்கிறார்கள். 1928-ஆம் ஆண்டில் ஸ்ரீ சாஸ்திரிகள் சிவபதமடைந்தார்.

சாஸ்திரிகளுக்குக் காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள் 1917-ல் 'சாஸ்த்ர ரத்னாகரம்' என்னும் பட்டமளித்து கௌரவித்தார்கள். காசி க்ஷேத்திரத்தின் பாரத தர்ம மஹா மண்டலத்தார் 1923-ல், சாஸ்திரிகளுக்கு 'மீமாம்ஸா ரத்னம்' என்ற பட்டத்தை அளித்து கௌரவித்தார்கள், சென்னைக்குப் பிரிட்டிஷ் இளவரசர் 1922-இல் விஜயம்செய்த போது அவருடைய தர்பாரில் நம் சாஸ்திரிகளை வரவழைத்து மெடல்களையும், தோடாவையும் அளித்து கௌரவித்தார். 1925-ஆம் ஆண்டு பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் 'மஹா மஹோபாத்யாய' என்னும் பட்டத்தை அளித்து வேங்கட ஸுப்பா சாஸ்திரிகளைக் கௌரவித்தது. சாஸ்திரிகளுக்கு ஷஷ்டியப்த பூர்த்தி நடந்த சமயம் காஞ்சீ ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் நவரத்னங்கள் இழைத்த கணையாழியை அணிவித்து கௌரவித்தார்கள். ஸம்ஸ்க்ருத கலாசாலையும் வெள்ளிப்பேழையை வழங்கியது. இவர் பாட்டதீபிகை என்ற மீமாம்ஸா கிரந்தத்திற்கு தம் தாய்வழிப்பாட்டனார் வாஞ் சேச்வர யஜ்வா இயற்றிய 'பாட்ட சிந்தாமணி' என்ற வ்யாக்யானத்தைப் பிரசுரிக்க முற்பட்டார். இவர் மிகுந்த வாக்கு வன்மையுடையவர். மிகவும் ஸரளமானவர். மாண வர்களிடம் மலர்ந்த இன்முகத்தோடு பாடம் நடத்துவார்,

குருவிடம் சிறந்த பக்தியும், சீடர்களிடம் மிகுந்த அன்புமுடையவர். ஒரு சமயம் இவருடன் கல்வி பயின்ற ஸ்ரீ நீலமேக சாஸ்திரிகளுக்கு 'மஹாமஹோபாத்யாய' பட்டம் கிடைக்க இருந்தபோது, நீலமேக சாஸ்திரிகளுடன் கூட நம் சாஸ்திரிகளும் சேர்ந்து, தங்கள் குருநாதருக்கு கிடைக்காத பட்டம் தமக்கு வேண்டாம் என்று வாதாடி, வென்று, குருநாதரான ஸ்ரீ ராமஸுப்பா சாஸ்திரிகளுக்கு 'மஹாமஹோபாத்யாய' பட்டம் கிடைத்த பின்னரே தாம் அப்பட்டத்தைப் பெற்றுக்கொண்டார். இவர் மிகுந்த ஆசார சீலர். என்றும் படாடோபத்தில் விருப்பமில்லாதவர். சென்னை ஸம்ஸ்க்ருதக் கல்லூரியில் 'மீமாம்ஸா சாலா' என்ற ஒருவகுப்பறைவேங்கடஸுப்பா சாஸ்திரிகளின் ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்டு, ஸ்ரீ காஞ்சி ஆசார்யாளினுல் படாடோபமற்ற முறையில் அது திறந்துவைக்கப்பட்டது. சாஸ்திரிகளுடைய சிஷ்யர்களில் முக்கியமானவர்கள் சிலர், K. A. லக்ஷ்மண சாஸ்திரிகள், அனந்தகிருஷ்ண சாஸ்திரிகள், சின்னஸ்வாமி சாஸ்திரிகள், ஆசார்ய ஸ்ரீ வெங்கடேச தீக்ஷிதர், பக்ஷிதீர்த்தம் ராமச்சந்திர தீக்ஷிதர், ஸோமதேவ சர்மா முதலியோராவர்.



# ஸ்ரீ நீலமேக சாஸ்திரிகள்

மஹான்களும் அறிஞர்களும் தோன்றிய, கும்பகோணத்தையடுத்த, காவிரியின் வடகரையில் உள்ள திருவிசநல்லூர் எனப்படும் ஸஹாஜிபுரத்தில் தோன்றியவரே பேரறிஞர் நீலமேக சாஸ்திரிகள். இவர் அவ்வூரிலேயே மாபெரும் அறிஞராகத் திகழ்ந்த ஸ்ரீ ராமஸுப்பா சாஸ்திரிகளிடம் வித்யாப்யாஸம் செய்தார். முக்யமாக மீமாம்ஸா சாஸ்திரத்தை அப்யஸித்தார். இளமையிலேயே கல்வியில் சிறந்த தேர்ச்சி அடைந்ததால், சென்னை மைலாப்பூர் ஸம்ஸ்க்ருதக் கல்லூரியின் நிர்வாகியாக அக்காலத்தில் வாழ்ந்துவந்த காலஞ்சென்ற, V. கிருஷ்ணஸ்வாமி அய்யரால் அக்கல்லூரியில் ஆசிரியராக நியமிக்கப்பட்டார், சென்னைக் கல்லூரியில் நீண்டகாலம் பணியாற்றியபோது இவர் மேலான புகழைப் பெற்ருர். இவருடன் கூடப் படித்தவர்களில் இவருடைய ஊரையே சேர்ந்த வேங்கடஸுப்பா சாஸ்திரிகள் முக்கியமானவர். இவர் தமக்கு இந்திய அரசாங்கத்தாரால் 'மஹாமஹோபாத்யாய' பட்டம் கிடைக்கும் என்ற சூழ்நிலையில் தன்னுடைய தோழரான வேங்கடஸுப்பா சாஸ்திரிகளுடன் சேர்ந்துகொண்டு, தம் குருவான ராமஸுப்பா சாஸ்திரிகளுக்குக் கிட்டாத இந்தபட்டம் தமக்கு வேண்டாம் என்று கூறி, குருவிற்கு அப்பட்டம் கிடைத்த பின்னரே தான் 'மஹாமஹோபாத்யாய' பட்டத்தைப் பெற்ருர் என்பது குறிப்பிடத்தக்கது.

# சேட்லூர் ஸ்ரீ நரஸிம்ஹாசார்யார்



தமிழகத்தில் தென்னாற்காடு ஜில்லாவில், கடலூர்நகரத்தருகே கடிலம் எனப்படும் கருட நதிக்கரையில், திருவஹீந்த்ரபுரம் என்ற வைணவத் திருப்பதியில், நரஸிம்ஹாசார்யார் விபவ வருஷம் ஐப்பசி மாதம் மூல நக்ஷத்ரம் கூடிய நன்னாளில் பிறந்தார். இவருடைய முன்னோர்கள் 'சேட்லூர்' என்ற குலப் பெயர் தாங்கியவர்கள். இவர் பிறந்த நாள் இவருடைய ப்ராகாசார்யரான ஸ்ரீ ரங்கராமனுஜ மஹாதேசிகனின் திருநக்ஷத்ரமாகும். இவருடைய தகப்பனார் ராமானுஜாசார்யரும், பாட்டனாரான தாதாசார்யரும் ஸம்ஸ்க்ருத மொழியில் சிறந்த அறிவு பெற்றவர்கள். நரஸிம்ஹாசாரியார் தமது தகப்பனாரிடம் காவ்ய பாடங்களைக் கற்றார். பின்னர் தமது சிறிய பாட்டனாரான, ஸன்யாஸாச்ரமம் பூண்ட ஸ்ரீநிவாஸ மஹாதேசிகரிடம் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்து கொண்டார். அன்னாரிடம் சிறிது காலம் வைஷ்ணவ ஸம்ப்ரதாய கிரந்தங்கள் சிலவற்றை அப்யஸித்தார். பிறகு ஸ்ரீரங்கத்திலும், உப்பிலியப்பன் கோயிலிலும் திருவஹீந்த்ர புரத்திலுமாக மற்ற ஸம்ப்ரதாயக்ரந்தங்களை அவரிடமிருந்தே காலக்ஷேபம் செய்தார்.

இவ்வித்வானுக்கு நல்ல ஸங்கீத ஞானமும், தக்க சாரீர காம்பீர்யமும் உண்டு. இவருக்கு ஸம்ஸ்க்ருத மொழியில் எவ்வளவு தேர்ச்சியுண்டோ, அதே போல் தமிழ்மொழியிலும்

அதிலும் முக்யமாகத் திவ்யப் பிரபந்தங்களிலும் ஸ்ரீவேதாந்த தேசிகரின் பிரபந்தங்களிலும் தெளிவான அறிவு உண்டு. ராமாயணப் பிரவசனத்தில் தேர்ந்தவர், அதிலும் ஸங்கீத மென்மையுடன் பிரவசனம் செய்வார். 1906-ஆம் ஆண்டில் இவர் சென்னை மாநகரத்திற்குச் சென்று, ஆங்கு வசித்து வந்தார். அது முதல் 25 ஆண்டுகள் திருவல்லிக்கேணி பகுதியிலும், புரசைவாக்கத்திலும் இருந்து வந்தார். இந்த சென்னை வாஸத்தின்போது இவர் வெங்கடேச்வரா அச்சகத்துடன் தொடர்பு கொண்டு பல அரிய நூல்களை இயற்றுவதிலும், பிரசுரிப்பதில் முக்ய பங்குகொண்டும் சிறந்த பணியாற்றியுள்ளார். ஸ்ரீபாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்த ஸாரம், பகவத் கீதைக்கு ஸ்ரீ ராமானுஜர் வ்யாக்யானமான தாத்பர்யம், ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ மத்வர் இயற்றிய உரைகளுடனும் கீதா பாஷ்யம், தாத்பர்ய சந்த்ரிகையுடன் (ஸ்ரீ ராமானுஜ பாஷ்யத்திற்கு விளக்கம்) ஆளவந்தார் அருளிய கீதார்த்த ஸங்க்ரஹம், அதற்கு விரிவுரையான கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை (வேதாந்த தேசிகருடையது) ஆகியவைகளுடன் அச்சிட்டுப்பிரசுரித்ததில்இவருடையபணி மிகச் சிறப்பானது. மற்றும் ஸ்ரீமத் பாகவதத்தின் பத்தாவது ஸ்கந்தத்தை விரிவுரையுடன் அச்சிட உதவியுள்ளார். இவர் ஸ்ரீபாஷ்யத்திற்கு எழுதியுள்ள ஸம்ஸ்க்ருத உபோத்காதம் (முன்னுரை) போற்றுதலுக்குரியது.

சென்னையில் 25 ஆண்டுகள் ஸ்ரீவைஷ்ணவ க்ரந்தங்களையும், மற்றும் ஸ்ரீவேதாந்த தேசிகனின் பெருமையையும் நூல்களைப் பிரசுரித்தும், ப்ரவசனங்களினுலும் பரப்பிய பெருமை இவரையே சாருமெனில் அது மிகையாகாது. அக் காலத்தில் பெருந்தகைகளாக விளங்கிய காலஞ்சென்ற V. V. ஸ்ரீனிவாஸய்யங்கார், வரதாசார்யார், பாஷ்யமய்யங்கார் போன்றவர்கள், நரஸிம்ஹாசாரியாரிடம் பெருமதிப்பும் மரியாதையும் வைத்திருந்தனர். சென்னையில் வசித்துவந்த காலத்தில் இவர் திருவல்லிக்கேணி, மைலாப்பூர், புரசவாக்கம், சிந்தாத்ரிபேட்டை, முத்தயால்பேட்டை போன்ற நகர்புறங்களில் வாழ்ந்து வந்த பலருக்கு ஸ்ரீபாஷ்யம், கீதா பாஷ்யம்,

பகவத் விஷயம் போன்ற க்ரந்தங்களை போதித்து வந்துள்ளார்,

இவர் வெளியிட்ட நூல்கள் பல. அவை பெரும்பாலும் மணிப்ரவாள நடையிலிருக்கும். அம்ருத ரஞ்ஜனீ ரஹஸ்யத்திற்கு விரிவுரை, தேசிகரின் பல பிரபந்தங்களுக்கு வியாக்யானங்கள், ஆளவந்தாரின் சதுச்லோகி ஸ்தோத்ரத்திற்கும், ஸ்ரீ ராமானுஜரின் சரணகதி கத்யத்ரயத்திற்கும், வேதாந்த தேசிகர் செய்த விரிவுரைகளுக்கு தமிழ்மொழி பெயர்ப்புகளும், சததூஷணி க்ரந்தத்திற்கு தமிழ் மொழி பெயர்ப்பும் அவர் இயற்றிய நூல்களில் முக்யமானவை, மற்றும் சில சிறிய புத்தகங்களையும் இயற்றியுள்ளார். இவருக்குக் கிடைத்த பட்டங்களும் விருதுகளும் பல. அவைகளில் சில - 'தேசிகதர்சனசார்யார்', 'பண்டித பூஷணம்', 'தேசிக தர்சன விஜயத்வஜர்'. 1926-ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கத்தினரால் இவருக்கு, மஹாமஹோபாத்யாய என்ற விருது அளிக்கப்பட்டது. 1939-ஆம் வருஷத்தில் இவர் திருப்பதியில் உள்ள ஸம்ஸ்க்ருத கலாசாலையில் வைஷ்ணவ வேதாந்தம் போதிக்கும் பண்டிதராக நியமிக்கப்பட்டார். அக்காலத்தில் வடநாட்டுப் பண்டிதர் ஒருவர் இவரிடம் ஸ்ரீ பாஷ்யம் முதலிய க்ரந்தங்களைக் கற்றறிந்தனராம்.

அக்காலத்தில் பிரபலமாக நடந்து வந்த அஹோபில மட வருஷாந்திரஸபையிலும் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த சபையிலும் உபந்யாஸங்களை செய்தார். 1929-ஆம் வருஷம் மன்னார்குடியில் நடந்த ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த சபைக்கு அக்ராஸனராக இருந்தார். அதில் தம்முடைய தலைமை உரையை ஸ்ரீ ஸத்ஸம்ப்ரதாய விவேகம் என்கிற ஒரு சிறிய நூலாக வெளியிட்டார். இவருக்கு வேதாந்த தேசிகனிடம் உள்ள பக்தி அஸாதாரணமானது. ஸ்ரீரங்கத்தில் கீழ உத்தர வீதியில் கட்டப்பட்ட ஸ்ரீ தேசிகன் ஸந்நிதி பிரதிஷ்டாபனத்தை ஸ்ரீரங்கம் தாதாசார்யருடன் கூட இருந்து நடத்திவைத்தார். திருவஹீந்த்ரபுரத்தில் ஸ்ரீ தேசிகன் ப்ரம்மோத்ஸவத்தில் பிரதி வருஷமும் ஒரு வித்வத் ஸதஸ் நடத்தி வந்தார்.

# ஸ்ரீ கணபதி சாஸ்திரிகள்



காவிரிநதி பாய்வதால் வளம் கொண்டு விளங்கும் சோழமண்டலப் பகுதியில் சிறந்து விளங்கும் தஞ்சை மாவட்டத்தின் ஒரு பகுதியே மன்னார்குடி என்று வழக்கில் உள்ள சம்பகாரண்யப் புனிதத்தலம். இச் சிறு பட்டினத்திலிருந்து சுமார் ஐந்து மைல்களுக்கப்பாலுள்ள ஒரு கிராமம் பைங்காநாடு எனப்படுவது. பத்தொன்பதாம் நூற்ருண்டின் ஆரம்ப ஆண்டுகளில் இச் சிற்றூரில், அந்தணர் மரபில் அனந்த ராமர் என்ற கற்றறிந்த அறிஞர் ஒருவர் இருந்தார். அவருக்கு ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி என்ற ஒரு தனயன் உண்டு, தகப்பனைப் போல் தனயனும் சிறந்த அறிஞர். இவர் யஜுர்வேதத்தில் புலமை பெற்று சிவ பக்தராகத் திகழ்ந்தார். இவர் தக்க வயதில் ஸீதா-லக்ஷ்மி என்ற மாதை மணந்தார். திருமணமாகிய பின் சில ஆண்டுகள்

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

அதே ஆண்டு இறுதியில் பிரமாதி வருஷம் கார்த்திகை மாதம் ரோஹிணீ நக்ஷத்ரம் கூடிய புண்யதினத்தில், இம் மஹான் வைகுண்ட பதவி அடைந்தார். இவருடைய 60-ஆம் திருநக்ஷத்ரம் (ஜீவதசையில்) 1928-ம் ஆண்டில், சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இவருடைய எழுபதாவது ஆண்டு விழா திருவஹீந்த்ரபுரத்தில் விசேஷமாகக் கொண்டாடப்பட்டது. பின்னர் 1968-ஆம் ஆண்டில் 100-ஆம் ஆண்டு விழா புல பக்தர்களால் சிறப்புடன் கொண்டாடப்பட்டது.

கழிந்தன. பிரஜோத்பத்தி வருடம், சித்திரை மாதத்தின் மத்தியில் (28-வ ஏப்ரல்-மீ 1871 வருடம்) இத்தம்பதிகளுக்கு ஒரு ஆண்குழந்தை பிறந்தது.

குழந்தைக்குப் பெற்ருேர் 'கணபதி' என்ற பெயரைச் சூட்டினர். குழந்தை வளர்ந்து வந்தது. ஐந்தாண்டுகள் உருண்டோடின. கணபதிக்கு எழுத்தறிவிக்க நினைத்தார் தகப்பன். சிறந்த மந்த்ரசாஸ்திர அறிஞரும், வேதாரண்யத்தில் ஒரு பாடசாலையில் ஆசிரியராகவுமிருந்த,கணபதியின் தாயின் தகப்பனுரான ஸ்வாமிநாத சாஸ்திரியைக்கொண்டே ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரியார் தனது மகனுக்கு அக்ஷராப்யாஸம் எனும், முதன்முதலாக எழுத்துக்களைப் போதிக்கும் சடங்கைச் செய்துவைத்தார். இதன் பின்னர் குழந்தையைப் பாட்டனுர் ஸ்வாமிநாத சாஸ்திரி வேதாரண்யத்திற்கு அழைத்துச்சென்ருர். அங்கு கணபதிக்கு, அவர் ஸம்ஸ்க்ருத மொழித் தோத்திரங்கள், ஸம்ஸ்க்ருத காப்பியங்கள் ஆகியவற்றை மூன்று ஆண்டுகள் வரை தன் இல்லத்திலேயே கற்பித்து வந்தார்.

1879-ஆம் ஆண்டு கோடைக்காலத்தில் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி ஸ்வாமிநாத சாஸ்திரியாரைப் பைங்கானுட்டிற்கு வந்து தன் வீட்டிலேயே தங்கியிருக்கும்படி வேண்ட, அவருமதற்கு இசைந்தார். கணபதியுடன் மாப்பிள்ளையின் இல்லத்திலேயே வாழத் தொடங்கினுர். அவ்வாண்டிலேயே கணபதிக்கு உபநயனம் செய்விக்கப்பட்டது. அந்தணனுக்குரிய காயத்ரீ மந்த்ரத்தின் உபதேசத்தைப் பெற்ற சிறிது காலத்திற்குப் பின்னர், கணபதிக்கு ஸ்ரீவித்யா மந்த்ரத்தின் உபதேசத்தை அவரது தாய்வழி பாட்டனுரே செய்துவைத்தார். இந்த மந்த்ர ஜபத்தின் விசேஷத்தினுலேயே கணபதி சாஸ்திரிகள் பிற்காலத்தில் பெரும் கல்வித்திறனையும், வாக் விலாஸத்தையும், புகழையும் அடைந்தார் என்று சொல்லப்படுகிறது. தனது பாட்டனுரிடம் ஸம்ஸ்க்ருத மொழியில் பயிற்சி பெற்று வந்ததுடனல்லாது பைங்காநாட்டிலேயே அக்காலத்தில் வாழ்ந்து வந்த வேங்கடேச்வர சாஸ்திரிகளென்ற அறிஞரிடம் ஸாஹித்ய சாஸ்திரத்தைக் கணபதி கற்றுவந்தார்,

இப்படியாக இவர் ஏழு ஆண்டுகளில் காவ்யங்கள், ஸாஹித்யம், மற்றும் க்ருஷ்ண யஜுர் வேதத்தின் முக்கியமான பகுதிகளையும் அத்யயனம் செய்துவிட்டார். இக்காலத்திலேயே தேவீமந்த்ரத்தின் ஏகாக்ரமான ஜபத்திலும் மனத்தை ஈடுபடுத்தியதின் பயனுகப் பதினும் வயதிலேயே கணபதிக்குச் சிறந்த வாக்விலாஸம் ஏற்பட்டு, காவ்யமியற்றுமளவிற்குத் திறனும் ஏற்பட்டுவிட்டதாம். பதினறு வயதுச் சிறுவன் 'கடாக்ஷசதகம்' என்ற அற்புதமான துதி நூலை இயற்றிய பெருமை கணபதி சாஸ்திரிகளைச் சாரும். பிறகு அவருடைய மனம் சாஸ்திரங்களைக் கற்க விரும்பியது.

மகனின் விருப்பத்தை யறிந்து, ஸுப்ரஹ்மண்யசாஸ்திரி மன்னர்குடியில் புகழுடன் திகழ்ந்தவரும், தலை சிறந்த சாஸ்த்ர அறிஞருமான ஸ்ரீராஜு சாஸ்திரிகளிடம் மகனை அழைத்துச் சென்றார். அப்பேரறிஞரை வணங்கி மகனின் விருப்பத்தைத் தெரிவித்தார், அம்மஹானும் கணபதியின் முகப்பொலிவையும், அடக்கத்தையும்பார்த்து, சீடனுக ஏற்றுக் கொண்டார். மூன்ருண்டு காலத்தில் மன்னர்குடிப் பெரியாரிடம் கணபதி தர்க்க சாஸ்திரத்தையும், வியாகர்ணத்தையும் முழுதும் கற்றறிந்தார். மன்னர்குடியில் கல்வி பயின்று திரும்பிய ஓராண்டிற்குள், தந்தையின் ஆணைக்குகந்து நடுத்தர வகுப்பைச் சேர்ந்த ஒரு பெண்மணியை மணந்து இல்லறம் நடத்தத் தொடங்கினர் கணபதி சாஸ்திரிகள். வருவாய் குறைவாகவுள்ள குடும்பத்தைத் தன் திறனல் சிறிது சிரமத்துடனேயே இவர் நடத்த வேண்டியிருந்தது. ஆயினும் குடும்ப வாழ்க்கை நிம்மதியுடனேயே நடந்து வந்தது. அக்காலத்தில் (19-ஆம் நூற்ருண்டின் கடைப்பகுதியில்) கல்விக்கும் கலைக்கும புகழ்பெற்றதாகத் திகழ்ந்த கும்பகோண நகரத்திற்குத் தென்கிழக்காகச் சுமார் 12 மைல் தொலைவிலுள்ள, கோனேரிராஜபுரம் என்னும் கிராமத்தில் ஸாம்பசிவய்யர் என்ற செல்வந்தர் ஒருவரிருந்தார். அவருக்கு ஸம்ஸ்க்ருத மொழிக் கல்வியிலும், அத்வைத தத்வ சாஸ்த்ரத்திலும் எல்லையற்ற பற்று. அன்னர் கும்பகோண நகரத்தில் 'ஸ்ரீவித்யா அச்சகம்' என்று ஓர் அச்சகத்தைத்

துவக்கி 'அத்வைதஸித்தி' போன்ற பல உயர்ந்த நூல்களை அச்சிட்டு வெளியிட்டார். மேலும் இவருக்குத் தனது கிராமத்திலுள்ளோர் ஸம்ஸ்க்ருத மொழியில் பயிற்சி பெற வேண்டுமென்ற ஆசையிருந்தபடியால், இவர் மன்னார்குடிக்குச் சென்று, ஸ்ரீ ராஜூ சாஸ்திரிகளவர்களிடம் தம் விருப்பத்தை வெளியிட்டுத் தனது கிராமத்திற்குச் சாஸ்திரிகளே வந்து தங்கவேண்டும், அல்லது அவர்களுடைய திறனுள்ள சீடரில் ஒருவரையனுப்பித்தர வேண்டுமென முறையிட்டார். சாஸ்திரிகளவர்கள் தமது சீடருள் சிறந்தவரான பைங்கா நாட்டில் வசித்து வந்த, கணபதி சாஸ்திரிகளை அழைத்துச் செல்லும்படி ஸாம்பசிவய்யருக்குத் தெரிவித்தார். ஐயர் பைங்காநாடு சென்று, கணபதி சாஸ்திரிகளை வேண்டினார். முதுமையடைந்த குருவான மன்னார்குடி சாஸ்திரிகளிடம் வேதாந்த பாடம் கற்க விரும்பிய கணபதி சாஸ்திரிகள் தன் குடும்பச் சூழ்நிலையை உத்தேசித்து கோனேரிராஜபுரத்திற்கு வர ஒத்துக்கொண்டார்.

கோனேரிராஜபுரத்தில் கணபதி சாஸ்திரிகளிடம் முதியவரும் இளைஞருமாகப்பலர் காவ்யங்களையும், சாஸ்திரங்களையும் கற்றனர். சாஸ்திரிகளின் போதனா முறை பலரைக் கவர்ந்தது. கோனேரிராஜபுரத்தில் தங்கியிருந்த காலத்தில் சாஸ்திரியார், சம்பு, நாடகம், சிறு கவிதைகள், ஸ்தோத்ரங்கள் பலவற்றை இயற்றினார். இவைகளுள் 'தடாதகாபரிணயம்' என்ற அவரது படைப்பு அவரது குருவான ராஜூ சாஸ்திரிகள் முதல் பலரது புகழுக்குகந்ததாகியதாம். 1892-ஆம் ஆண்டில் திருவனந்தபுரத்தில் நடந்த மஹாராஜாவின் துலாபார விழாவிற்கு கணபதி சாஸ்திரிகள் சென்றிருந்தார். அங்கு குழுமியிருந்த வித்வான்களால் இவர் சிறந்த அறிஞரெனக் கொண்டாடப்பெற்று அரசராலும் கௌரவிக்கப்பட்டார். 1894-ஆம் ஆண்டில் க்ருஷ்ணயஜுர் வேதத் தொடர்பு கொண்ட 'வைதிகாபரண வ்யாக்யானம்' (முகுரம்) என்ற நூலை இயற்றினார். பின்னர் ஸாமவேத ஸம்பந்தமான 'காலஸ்வர கௌமுதி' என்ற நிர்ணய நூல் ஒன்றையும் படைத்தார் சாஸ்திரியார், கோனேரிராஜபுரத்

தில் தனது தம்பி பஞ்சாபகேச சாஸ்திரிகளை இருக்கச்செய்து. கணபதி சாஸ்திரிகள் மன்னார்குடி சென்று, தமது குருவிடம் (ராஜு சாஸ்திரிகளிடம்) வேதாந்த பாடம் படித்துப் பின்னர் மறுபடி கோனேரிராஜபுரம் சேர்ந்தார். இதன் பின்னரேயே சாஸ்திரிகள் திருவனந்தபுரம், நங்கவரம். சென்னை போன்ற பல ஊர்களுக்குச் சென்று ஆங்காங்குள்ள கற்றறிந்த கன வான்களின் வேண்டுகோள்களுக்கிணங்கி அரிய மதஸம்பந்த மானவும், இதிஹாஸ தர்மப்ரசாரச் சொற்பொழிவுகளையும் நடத்தி பெருமையும் புகழும் பெற்றார்.

கோனேரிராஜபுரத்தில் தங்கியிருந்த காலத்தில் அக் கிராமத்தினருகே கீர்த்திமானுற்றங்கரையில் அமைந்துள்ள மடத்தில் சுமார் ஓராண்டு காலம் தங்கியிருந்த ஒரு வட நாட்டுயோகியினிடம் நமது சாஸ்திரியார், யோகாப்யாஸம், ரஸவாதம், வைத்யம் முதலியவற்றின் அறிவு பெற்றாரெனச் சொல்லப்படுகிறது. இந்தக் காலத்தில் 'சரகஸம்ஹிதை' என்ற சிறந்த ஆயுர்வேத நூலையும் அவர் படித்து முடித்தார்.

1901-ஆம் ஆண்டில் கும்பகோணத்தில் திகழ்ந்த அத்வைத ஸபையில் முதன் முதலாக சாஸ்திரியார் கலந்து கொண்டார். நான்கு ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் அத்வைத ஸபையின் முக்கிய பண்டிதராக ஸபையினரால் நியமிக்கப்பட்டார். சாஸ்திரியாரும் இப்பதவியை ஏற்று ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் சங்கராசார்ய ஸ்வாமிகளின் கும்பகோண மடத்தில், அநேகமாக நாள்தோறும் கீதை, ஸூதஸம்ஹிதை, ஞானவாஸிஷ்டம் போன்ற க்ரந்தங் களின் பகுதிகளை உபன்யாஸம் செய்து வந்தார்கள். 1905-ஆம் ஆண்டு ஹுப்ளி நகரத்திய சங்கர ஜயந்தி விழாக் குழுவினர், நாட்டின் பல பகுதிகளில் வாழ்ந்த வித்வான்களுக்கு அத்வைத ஸம்பந்தமான சில கேள்விகளை யனுப்பி, சரியான விடையனுப்புவோருக்கு நல்ல ஸன்மானத்தையும் கொடுக்க முன் வந்தனர். வித்வான்களால் அனுப்பப்பட்ட விடைகள் ஓர் அறிஞர் குழாத்தின் உதவியுடன் அக்காலத்தில் த்வாரகா சங்கர பீடத்தை யலங்கரித்த ஸ்ரீ சங்கராசார்ய

ஸ்வாமிகளால் பரிசீலிக்கப்பட்டன. நமது கணபதி சாஸ்திரிகள் அனுப்பிய விடைகளே மிகச்சிறந்ததாகத் தீர்மானிக்கப்பட்டது. துவாரகா மடாதிபதி கணபதி சாஸ்திரிகளுக்கு 'வேதாந்த கேஸரி' என்ற பிருதையும் ஸன்மானங்களையும் அனுப்பிவைத்தார்கள். இது போல் திருவனந்தபுரம் மஹாராஜாவினுல் 'கச்சபீ' * என்ற பிருதும் சாஸ்திரியாருக்கு வழங்கப்பட்டது.

இப்படி சாஸ்திரிகளின் புகழ் ஓங்கிவரும் காலத்தில்தான் அக்காலம் ஸ்ரீ காமகோடி பீடத்தையலங்கரித்த ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளால் ஸ்ரீ மடத்தின் பிரதான ஆஸ்தான வித்வானுகக் கணபதி சாஸ்திரிகள் நியமனம் பெற்றது. இந்தப் பதவியை அடைந்த சாஸ்திரியார் பரம பாக்யசாலி என்பதை செப்பத் தேவையில்லை. 1907-ஆம் ஆண்டின் மத்தியிலிருந்து (சில ஆண்டுகள்) நம்மிடையே தற்காலம் நடமாடும் தெய்வமாக, தவ மலையாக, உலகமெலாம் போற்றுமுத்தமராக ஒளி வீசிவரும் ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களுக்குக் காவ்யங்களிலும் சாஸ்திரங்களிலும் பாடம் சொல்லும் பாக்யம் கணபதி சாஸ்திரிகளுக்குக் கிட்டியதன்றே!

1911-ஆம் ஆண்டில் கள்ளிக்கோட்டை, பாலக்காடு போன்ற கேரளப் பகுதிகளில் சாஸ்திரிகள் பல சொற்பொழிவுகள் நடத்தினுர்கள். கள்ளிக்கோட்டை ஜாமூதிரி, சாஸ்திரிகளுடைய திறனை மெச்சி ஸன்மானங்கள் வழங்கினுர். இதே ஆண்டில் பாலக்காட்டில் நடந்த அத்வைத ஸபையின் ஸதஸின் வெற்றிக்குச் சாஸ்திரிகளே முக்ய காரணமானுர்.

1912-ஆம் ஆண்டில் சாஸ்திரிகள் நோய் வாய்ப்பட்டார். சிறந்த சிகிச்சை கொடுக்கப்பட்டும், அவர் குணமடையவில்லை. தனது அந்த்ய காலம் நெருங்கியதை எண்ணி அவர், கடைசி நாட்களில் த்யான நிலையிலும், பகவத் பாத சங்கரரின் உபதேசங்களையும், அவதார மஹிமையைப்

---

* இந்த பிருது வித்வான்களால் அளிக்கப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது.

பற்றியும், ஸதாசிவப்ரஹ்மேந்த்ராளின் ஆத்ம வித்யாவிலாஸத்தைக் கானம் செய்வதிலும் பெரும்பாலும் கழித்துவந்ததாகப் பலர் கூறக்கேட்டுள்ளோம். 1912-ஆம் ஆண்டு இறுதியில் கணபதி சாஸ்திரிகள் முக்தியடைந்தார். இவருடைய மரணத்திற்குப்பின்னரே இவருக்கு இந்திய அரசாங்கத்தாரால் 'மஹாமஹோபாத்யாய' என்ற பட்டம் வழங்கப்பட்டது. இப்பட்டம் கிடைக்கப்போவதாக அவர் உயிருடனிருக்கும் போது அவருக்கும், பிறருக்கும் தெரியாதாம். கணபதி சாஸ்திரிகள் ஒரு மாபெரும் மேதை; மிக்க கூர்மையான புத்தியைப் படைத்தவர். சிவபக்திச் செல்வர். ஆழ்ந்த தேவீ உபாஸகர். அன்றுடம் அந்தணனுக்குரிய கடமைகளைச்செய்வதில் தவருதவர். கற்றவர், கல்லாதவர். ஏழை, செல்வந்தர், ஆகிய யாவருடைய மதிப்புக்குமுரியவர். ஒப்பற்ற கவித்திறனும், நாவன்மையும் படைத்தவர், சிறந்த எழுத்தாளர். 41 ஆண்டுகளே இம்மண்ணுலகில் வாழ்ந்தாரெனினும், சிறியனவும் பெரியனவுமாக நூற்றுக்கதிகமான நூல்களைப் படைத்தாரென்ருல் அவரது அறிவு, ஆற்றல், உழைப்புக்குச் சான்று என்ன வேண்டும்?

அந்த நூல்களில் சிலவே அச்சாகின. பல கிடைக்கவே இல்லை. கீழே சாஸ்திரிகளியற்றிய நூல்களில் தெரிந்தவைகளின் பெயர்கள் தரப்பட்டுள்ளன.

1. வைதீகாபரண வ்யாக்யானம் (முகரம்-யஜுர்வேதம்)
2. காலஸ்வர கௌமுதி (ஸாமவேத தொடர்புள்ளது)
3. த்ருவசரிதம் (காவ்யம்)
4. தடாதகாபரிணயம் (சம்பூ)
5. ஸாரஸிகா ஸந்தானம் (நாடகம்)
6. ஜீவவிஜயம் (சம்பூ)
7. ஸாரஸ்வத ஸஹஸ்ரம்
8. கடாக்ஷசதகம்
9. ரஸிகபூஷணம்
10. துரக சதகம்
11. வ்ருத்தமணிமாலா

12. அன்யாபதேச பஞ்சாசத்
13. லக்ஷ்மீவிலாஸம் (நாடகம்)
14. நைர்குண்யஸித்தி
15. பரமேச்வர அஷ்டகம் (ஸ்தோத்ரம்)
16. மஹாமாயாஷ்டகம் ,,
17. ஸூர்யத்வாதசம் ,,
18. ஸம்ஸ்க்ருதாஷ்டகம்
19. ஸுப்ரஹ்மண்யாஷ்டகம் ,,
20. சனைச்சராஷ்டகம் ,,
21. க்ருஷ்ணத்வாதசகம் ,,
22. குருவாயூர் க்ருஷ்ணாக்ஷரமாலிகா
22. ஸ்ரீ சங்கராசார்ய அஷ்டோத்ரம்
24. குருராஜ ஸப்ததி (ஸ்தோத்ரம்)
25. தீபாவளி நிர்ணயம்
26. வயோநிர்ணயம்
27. ஆசார்யோக்தி விபூஷணம்
28. கேனோபனிஷத் விபூதி (வேதாந்தம்)
29. ஈசோபனிஷத் விபூதி ,,
80. துர்ஜனக ஜனதர்சனம்
31. ஆர்திஹராஷ்டகம்
82. அதசப்தார்த்த விசாரம்
83. ஆபஸ்தம்ப அபரஸூத்ர வ்ருத்தி
34. விபூதி தாரணம்
35. ஸபிண்டீகரண விதி
36. தேவீத்வாதச மஞ்ஜரி (ஸ்தோத்ரம்)
37. முகரமுக முத்ரணம்
38. பர்யாயோக்திசத-வ்யாக்யானம்
39. குருவாயூர் பகவத்சதகம்
40. ஸபிண்டீகரண க்ஷௌர நிர்ணயம்
41. ஆசீர்வாத-மஞ்ஜரீ
42. ப்ரஹஸனம் (நாடகம்)
43. கும்பேசாஷ்டகம் (ஸ்தோத்ரம்)
44. பார்த்தப்ரஹரம் (வ்யாகர்ணம்)
45. ஸாம்ராஜ்யலக்ஷ்மீ பரிணயம் (நாடகம்)

46. தேவீஅஷ்டப்ராஸம் (ஸ்தோத்ரம்)
47. மாயாநிவ்ருத்தி சதகம் (வேதாந்தம்)
48. நிச்ரேயஸ நிச்ரேணி
49. யக்ஞவைபவப்ரகாசம்
50. ஈசாவாஸ்ய வ்ருத்தி (வேதாந்தம்)
51. மூகப்ரஸாதாதர்சம்
52. த்ரவ்யகுணப்ரபாகரம்
53. யோகீச்வரதர்சன் மஹிமா
54. சாரீரக மீமாம்ஸ ரஹஸ்யம் (வேதாந்தம்)
55. கர்மண சித்தசுத்திப் ப்ரஹாரம்
56. பரமேச்வரார்ப்பணநமஸ்க்ருதி (துதிநூல்)
57. ஆசாதூஷணம்
58. அனந்தபத்மநாப ஸ்துதி (ஸ்தோத்ரம்)
59. தேசிகதண்டகம் ,,
60. ந்யாயரக்ஷாமணி (சோதித்து தொகுத்தது)
61. ஸ்ரீ ருத்ரபாஷ்யம் ,,
62. காச்யபக்ஷேத்ர மஹாத்ம்யம் ,,
63. மஹாபாரதம்-சாந்திபர்வம் (தமிழ் மொழிபெயர்ப்பு)



# ஸ்ரீ முஷ்ணம் ஸுப்பராயாசார்யார்

**த**மிழ் நாட்டில் தென்ஆற்காட்டில் ஸ்ரீமுஷ்ணம் என்ற சிறந்த வைணவத்தலமொன்றுள்ளது. இத்தலத்தில் சுமார் 400 ஆண்டுகளுக்கு முன்னர், 'ஆர்யாசார்யா' என்ற மிகப்புகழ் பெற்ற, தெய்வீகத் தன்மை பொருந்தி விளங்கிய ஸ்ரீநரஸிம்ஹாசார்யா என்ற சிறந்த வித்வான் ஒருவர் வாழ்ந்து வந்தார். அப்பெரியாரின் குலவழியேதோன்றிய பண்டித நாராயணாசார்யாருக்கும் அம்புஜம்மாளுக்கும் ஸ்ரீமுஷ்ணம் கிராமத்தில் துர்முகி வருஷம் ஆனி மாதம், நான்காம்நாள் (1836 ஜூன்மாதம்15 ஆம் நாள்) ஸுப்பராயாசார் பிறந்தார்,



சிறு வயதிலேயே உபநயனம் செய்விக்கப்பட்ட ஸுப்பராயாசார் திருவாரூரில் தமது தாய்மாமனிடம் வேதாத்யயனம் செய்தார். பின்னர் மன்னார்குடியில் தனது சிறிய தகப்பனாரிடம் ஸாஹித்ய பாடங்களைக் கற்றறிந்தார். பின்னர் மன்னார்குடியிலேயே பண்டித கோபாலாசார்யாரிடம் வ்யாகர்ண சாஸ்திரத்தை அப்யாஸம் செய்தார். சிறு வயதிலேயே இவருக்குத் திருமணம் ஆகியது. பின்னர் ஸுப்பராயாசார் வ்யாகர்ணத்தில் மேற்படிப்பிற்காக, ஸ்ரீபெரும்புதூர் சென்று அங்கு சிறிது காலம் தங்கியிருந்து, ஸ்ரீ ஹயக்ரீவாசார்

என்பவரிடம் படித்துவந்தார். அவருடைய ஆசிபெற்று அவருடைய சிபார்சுடன் மஹாராஷ்டிர தேசத்திலுள்ள பண்டரபுரத்தில் வசித்துவந்த வ்யாகர்ண மஹாவித்வானன க்ருஷ்ணமாசார்யார் என்ற பெரியாரை அணுகி, அன்னாரிடம் வ்யாகர்ணசாஸ்திரத்தில் பூர்ணமான அறிவைப்பெற்ருர். பின்னர் பண்டரபுரத்திலிருந்து ஸுப்பராயாசார், கோல்ஹாபூர் ஸமஸ்தானத்திற்குச்சென்று, அங்கு வாழ்ந்துவந்த தர்சனங்களில் ஒப்பற்ற புலமையுடன் விளங்கிய, பண்டித பிக்கு சாஸ்திரி என்பவரிடம் ந்யாய சாஸ்திர பாடங்களைக் கேட்டுத் தேர்ச்சிபெற்ருர். கோல்ஹாபூரில் படித்து வந்த காலத்தில், அவ்வூரைச்சேர்ந்த, 'பஞ்சவாதம்' என்ற நூலுக்கு உரை செய்துள்ள பண்டித ரகுநாத தார்கிகர் என்பாரை வாதில் வென்று ஸுப்பராயாசார் புகழடைந்தார்.

வ்யாகர்ணத்திலும், ந்யாய சாஸ்திரத்திலும் முழுமையானஅறிவுடன்,ஸுப்பராயாசார் ஸ்ரீமுஷ்ணத்திற்குத்திரும்பினுர். சிறிது காலம் கழித்து இவர் புதுக்கோட்டை குப்புஸ்வாமி சாஸ்திரி என்ற அறிஞரிடம் பூர்வ மீமாம்ஸா சாஸ்திரத்தையும், தன் உறவினரான பண்டித ராமண்ணுசார்யரிடம் த்வைத வேதாந்தத்தையும் படித்தறிந்தார். உடுப்பி க்ருஷ்ணுபுர மடத்தின் பூஜ்ய ஸ்ரீ வித்யாதீச தீர்த்த ஸ்வாமிகளிடம் வேதாந்த சாந்தி பாடம் படித்து முடித்தார். பல ஸ்தாபனங்கள் ஸுப்பராயாசாருக்குத் தகுதியுள்ள பதவிகளை வழங்க முன் வந்த போதிலும், இவர் பதவி மோஹம் கொள்ளாது சுதந்திரமாகவே வாழ்ந்து வந்தார்.

இம்மஹாவித்வான் தஞ்சை, புதுக்கோட்டை, மைஸூர், திருவாங்கூர், கொச்சி, பரோடா போன்ற ஸமஸ்தானத் தலைநகர்களில் ஆண்டுதோறும் நடக்கும் வித்வத் ஸதஸ்களில் பங்கு கொண்டு, சால்வைகள், தங்கத் தோடாக்கள் போன்ற மேலான பல வெகுமதிகளைப் பெற்று வந்தார். மற்றும் மேற்கண்ட இடங்களில் நடந்து வந்த ஸதஸ்களிலும், திருச்சானூர் (திருப்பதி) மத்வஸித்தாந்த உன்னுஹினி ஸபையிலும், பல ஆண்டுகள் ஆய்வாளராகத்

திகழ்ந்து வந்தார். ஒரு ஸமயம் தஞ்சாவூர் அரண்மனையில் நடந்த மாபெரும் வித்வத்ஸதஸில், பண்டித குப்புஸ்வாமி அய்யங்கார் என்ற பேரறிஞரை, வ்யுத்பத்தி வாதத்தில் வென்ற ஸுப்பராயாசார், தஞ்சை அரசி, அரச குடும்பத் தினரின், போற்றுதலைப்பெற்று, அரண்மனையின் ஆஸ்தான வித்வானுக்கப்பட்டார்.

பிற்காலத்தில் ஸுப்பராயாசாரிடம் சீடர்களாக இருந்து வ்யாகர்ணம், த்வைதவேதாந்தம் முதலிய சாஸ்திரங்களைக் கற்றவர்கள் பலர். அவர்களுள் முக்யமானவர்கள், திருவையாற்றிலுள்ள ஸம்ஸ்க்ருதக் கல்லூரியில் பின்னர் முதல்வராக விளங்கிய நதீதீரம் ஸேது மாதவாசார்யார், புதுக்கோட்டை கோபால சாஸ்திரி, சதாவதானி டி. லக்ஷ்மணாசார்யா, ஆர். வி. கிருஷ்ணமாசார்யார், கே. நாராயணாசார்யார், வி. அநந்தாசார்யா, பிற்காலத்தில் பூனா அரசாங்கக் கல்லூரிப் பேராசிரியரும், 'காவ்யப்ரகாச வ்யாக்யா' என்ற நூலை இயற்றியவருமான வாமன பட்ட ஜலகீகர், திருவனந்த புரம் ராமகிருஷ்ண சாஸ்திரி, ஷோலாப்பூர் கோவிந்த சாஸ்திரி, பண்டித பி. கிரிதராசார்யா (திருப்பதிக் கல்லூரி ஆசிரியராகப் பின்னர் பணியாற்றியவர்), பண்டித எஸ்.ஸுப்பராவ் (பின்னர்திருப்பதிக் கல்லூரி முதல்வர்), பின்னர் திருப்பதி வேங்கடேச்வர பல்கலைக்கழகத்தில் ஆகமப் பிரிவின் தலைவராக விளங்கிய R. பார்த்தஸாரதி பட்டாசார் யார் முதலியோராவர்.

மன்னார்குடிப் பெரியோர் ராஜு சாஸ்திரிகளுடன் வாதம், ஸல்லாபமான ஸம்பாஷணை ஆகியவற்றில் ஈடுபட்டு அப்பெருந்தகையின் போற்றுதலுக்கும் ஸுப்பராயாசார் பாத்ரமானவர். உத்தராதி மடத்து ஸ்வாமிகளான ஸ்ரீ ஸத் யத்யான தீர்த்தர் ஸுப்பராயசாருக்குக் கனகாபிஷேகம் செய்வித்து மகிழ்ந்தார் எனில் இவருடைய அறிவின் உயர்வு புலப்படும். காசிமாநகரின் அக்காலத்திய மஹாவித்வான் களின் குழாம் இவருக்கு 'வ்யாகர்ணகேஸரி' என்ற பிருதை வழங்கிக்கௌரவித்தது. 1911-ஆம் ஆண்டில் டில்லி

யில் நடந்த ஜார்ஜ் மன்னரின் முடி சூட்டு விழாவின் போது ஸுப்பராயாசாருக்கு, இந்திய அரசாங்கம் 'மஹாமஹோ பாத்யாய' பட்டத்தை அளித்துப் போற்றியது. இவர்தமது மகன் ஸேதுமாதவருடன் தமது இறுதி ஆண்டுகளைத் திருப்பதியில் கழித்தார்.

பழுத்த அறிவும், உயர்ந்த புகழும், முதிர்ந்த ஆயுளும் கொண்ட ஸுப்பராயாசார் தமது 82-ஆம் பிராயத்தில் காளயுக்தி வருஷம், கார்த்திக-க்ருஷ்ணத்ரயோதசி யன்று, (1—12——1918) தம் பூதவுடலை நீத்து, விண்ணுலகிற் கேகினர்.

ஸுப்பராயாசார் அறிவின் நிறைகுடம். ஆசாரசீலர், நற்குணங்கள் படைத்தவர். இவர் எழுதிய நூல்கள் பலவற்றுள், பரிபாஷேந்துசேகர வ்யாக்யா, சப்தேந்துசேகர வ்யாக்யா, ப்ரஹ்மஸூத்ரபாஷ்ய வ்யாக்யா, கீதாபாஷ்ய வ்யாக்யா, தந்த்ரஸாரவ்யாக்யா போன்ற விரிவுரை நூல்களும், இவைகளைக்காட்டிலும், த்வைதபாஷ்ய வ்யாக்யானமும் முக்யமானவைகளாம்.



# ஸ்ரீ ஸேது மாதவாசார்யார்

தென் ஆற்காடு ஜில்லாவைச் சேர்ந்த, சிதம்பரத்திலிருந்து விருத்தாசலம் செல்லும் பாதையிலுள்ள ஸ்ரீமுஷ்ணம் எனும் வைஷ்ணவ க்ஷேத்திரத்தில் பரம்பரையாக வித்வான்களாகத் திகழ்ந்த மத்வ அந்தணர் வகுப்பைச் சேர்ந்த வ்யாகர்ண கேஸரி மஹா மஹோ பாத்யாய ஸுப்பராயாசார்யார் என்ற மஹாவித்வானின் குமாரராக ஸேதுமாதவாசார்யா, 1871ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் நான்காம் நாளன்று பிறந்தார். ஓராண்டு முடிவடைந்த குழந்தையாக இருக்கும்போதே ஸேதுமாதவாசார் தாயை இழந்தார்.



குழந்தை திருவையாற்றைச் சேர்ந்த குண்டாசார்யா என்பவரால் வளர்க்கப்பட்டது. தக்க வயதில் உபநயனம் செய்விக்கப்பட்டு, தமது தகப்பனாரிடமே ஸேதுமாதவர் வ்யாகர்ணம் முதலிய சாஸ்திரங்களைக் கற்க ஆரம்பித்தார். இருபதாம் ஆண்டு பூர்த்தியாகுமுன்னரே ஸேதுமாதவர் நல்ல அறிவு பெற்ற இளம் அறிஞராகக் காட்சியளித்தார். உழைப்பும், ஊக்கமும், இவரை முன்னேற்றப்பாதையில் கொண்டு சென்றது. இளமையிலேயே இவர், தகப்பனாரைப்போலவே புதுக்கோட்டை, மன்னார்குடி, தஞ்சை, சென்னை, திருச்சா

னூர் போன்ற இடங்களில் நடைபெற்றுவந்த வித்வத் ஸபைகளில் பங்கு கொண்டு புகழடைந்தார்.

தமது இருபத்தாரும் பிராயத்தில் ஸேது (1897) திருப்பதி ஸம்ஸ்க்ருதக் கல்லூரியில் பேராசிரியராக நியமிக்கப் பெற்ருர். இக்கல்லூரியிலேயே செவ்வனே பணிபுரிந்து, அதன் முதல்வராகவும் உயர்த்தப்பட்டு, 37 ஆண்டுகளின் ஸேவைக்குப்பின், கல்லூரியிலிருந்து இவர் 1934-ஆம் ஆண்டில் ஓய்வு பெற்ருர். மாணுக்கரின் கட்டுப்பாட்டில் மிகுந்த ஆர்வமும் கண்டிப்புமுள்ளவராயினும், இவரிடம் மாணவர்கள் எல்லேயற்ற மதிப்பும், அன்பும் வைத்திருந்தனர். பின்னர் இரண்டு ஆண்டு காலம் திருச்சானூரில் (திருப்பதி) மத்வ ஸித்தாந்த ஸபை பாடசாலேயில்ஆசிரியராகப் பணியாற்றினுர். அது முதல் திருச்சானூரையே தனது நிரந்தர வாஸஸ்தானமாக்கிக் கொண்டார்.

ஓய்வு பெற்ற பின் இவர் பல அரிய நூல்களே எழுதுவதிலும், பிற தத்வ சாஸ்திரங்களே ஆராய்வதிலும் காலத்தைச் செலவிட்டுவந்தார். அத்வைத க்ரந்தங்களிலும், விசிஷ்டாத்வைத க்ரந்தங்களிலும் தேர்ச்சிபெற்ருர். 1943-ம் ஆண்டில் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் இவருக்கு 'மஹா மஹோபாத்யாய' பிருதை அளித்து கௌரவித்தது. இவரை மத்வஸம்ப்ரதாய மடாதிபதிகள்கௌரவித்ததன்றி ஸ்ரீகாஞ்சீ காமகோடி சங்கராசார்ய மடாதிபதிகள், ச்ருங்கேரி சங்கராசார்யர், அஹோபில மடத்தின் ஸ்வாமிகள் போன்ற பிற மடாதிபதிகளும் ஸபைகளுக்கு வரவழைத்து, பெரிதும் கௌரவித்துள்ளனர். 1950-ஆம் ஆண்டில் இவர் ஆந்திரதேசத்திற்கு விஜயம் செய்த போது, நெல்லூர், ராஜமஹேந்த்ரம். விஜயவாடா போன்ற பல இடங்களில் வித்வான்களாலும், பொதுமக்களாலும் மிகவும் போற்றப்பட்டார். 1955-ஆம் ஆண்டில் இவரது 84-ஆம் பிறந்தநாள் விழா திருப்பதி, திருச்சானூர் பிரமுகர்களால் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. 1957-ஆம் வருடம் இந்த நாடுமுழுதும் சுற்றுப் பயணம் செய்த, மத்ய சர்க்காரால் நியமிக்கப்பட்ட ஸம்ஸ்க்

ருந்தக் குழு இவரைத் திருச்சானூரில் ஸந்தித்து ஸம்ஸ்க்ருத மொழி வளர்ச்சியைப்பற்றி இவருடைய அபிப்ராயத்தைத் தெரிந்துகொண்டது. ஸம்ஸ்க்ருத மொழியின் வளர்ச்சிபற்றிய ஸேதுமாதவாசார்யரின் கருத்துக்களைப் போற்றி பல தினச் செய்தித்தாள்கள் தக்க தலையங்கத்துடன் பிரசுரித்தன. திருப்பதியில் நடந்த ஸம்ஸ்க்ருத விச்வபரீஷத்திற்குத் தலைமைதாங்கிய பாபு ராஜேந்த்ரப்ரஸாத், கபிஸ்தலம் தேசிகாசார்யார் (மஹா மஹோபாத்யாய), கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் (மஹா மஹோபாத்யாய) போன்றவர்கள் இவரைப் பலவாறு புகழ்ந்துள்ளனர். 1957-ஆம் ஆண்டு மே மாதம் 3-ஆம் நாள். தமது தகப்பனாரைப் போலவே நீண்ட ஆயுளுடனும், தேர்ந்த அறிவுடனும். மஹாமஹோபாத்யாயப் பட்டமும் பெற்றும், புகழும் அறிவும் நிரம்பிய, அவர் விண்ணுலகடைந்த அதே திருப்பதி க்ஷேத்ரத்தின் சாரலில் மஹா மஹோபாத்யாய ஸேது மாதவாசார்யரும் விண்ணுலகெய்தினார் என்பது வியப்புக்குரிய செய்தியேயாம். தம் வாழ்நாள் முழுதும் சிறந்த ஆசார சீலராகவும், நல்ல ஆசிரியராகவும், எப்போதும் படிப்பதில் ஊக்கங் கொண்டவருமாக ஓர் எடுத்துக்காட்டாகவே இவர் விளங்கினார்.

வ்யாகர்ணத்திலும், வேதாந்தத்திலும் சிறந்த வல்லுனரான ஸேதுமாதவர் எழுதிய நூல்களுள் முக்யமானவை:— (1) வ்யாஸ-பாணினீபாவநிர்ணயம் (2) புருஷஸூக்தம்-காயத்ரீ வ்யாக்யானம் (3) அபினவசந்த்ரிகா (பதிப்பு) (4) திதிநிர்ணயம் (5) ருக்வேத பாஷ்ய டீகா வ்யாக்யானம். இவைகள் எல்லாவற்றிலும் மேலானதும் இவருக்குப் பெரும் புகழ்தேடியதுமான 'தத்வ கௌஸ்துப குலிசம்' என்ற நூல் பல அறிஞர்களால் போற்றப்பட்டதாகும். இந்நூல் பட்டோஜி தீக்ஷிதர் (17-ஆம் நூற்றாண்டு) எழுதிய 'தத்வகௌஸ்துபம்' என்ற நூலிற்கு பதிலுரையாகும்.

---

# ஸ்ரீ தண்டபாணிஸ்வாமி தீக்ஷிதர்

தமிழ் நாட்டில் ஆகாச க்ஷேத்ரம் எனப் புகழ் வாய்ந்த சிதம்பரத்தில் தண்டபாணி ஸ்வாமி தீக்ஷிதர் 1874-ஆம் ஆண்டில் பிறந்தார். இவரது தந்தையின் பெயர் சிவகாம வல்லப தீக்ஷிதர். தாய் சிவகாமஸுந்தரீ. இவரது பாட்டனுர் மீனுக்ஷிநாத தீக்ஷிதர் சிறந்த வித்வான். அன்னுர் 'சிதம்பர தத்வ நிர்ணயம்' என்ற நூலின் ஆசிரியராவார்,

தண்டபாணி ஸ்வாமி ஐந்தாண்டுகள் சிதம்பரம் ஆறுமுக நாவலர் சைவப் பிரகாச வித்யாசாலையில் தமிழ், ஸம்ஸ்க்ருதம் ஆகிய மொழிகளைக் கற்ருர். 1883-ல் சிதம்பரத்தில் புதிதாக ஏற்பட்ட, ரா. ம. சு. பாடசாலையில் காவ்ய பாடங்களைக் கற்ருர். அப்பாடசாலையில் பணியாற்றிய சந்திரசேகர தீக்ஷிதர் இவருடைய தாய்மாமன். அங்கேயே வைத்தீச்வரசாஸ்திரிகளிடம் நாடக அலங்காரங்களையும், ஸித்தாந்த கௌமுதியையும், தீக்ஷிதர் படித்து முடித்தார்.

1888-ஆம் ஆண்டில் லக்ஷ்மீ என்னும் சிறுமியை மணந்தார். 1890-ஆம் ஆண்டில் புதுக்கோட்டை ஸமஸ்தான ஸம்ஸ்க்ருத பாடசாலையின் முக்கிய ஆசிரியராகத் திகழ்ந்த திருவையாறு கோபால சாஸ்திரிகளிடத்தில் வ்யாகர்ண சாஸ்திரத்தை முழுதும் படித்து, பூர்வ மீமாம்ஸா சாஸ்திரத்தின் சில பகுதிகளையும் அறிந்தார். 1893-ஆம் ஆண்டில் திருவாங்கூர் மஹாராஜா மூலம் திருநாளின் துலாபார விழாக் காலத்தில் நடைபெற்ற வித்வத் ஸபையில், சிறந்த ஸன்மானத்தைப் பெற்ருர். அடுத்த ஆண்டில் சென்னை திருவல்லிக்கேணி வேத வேதாந்த வர்த்தனீ ஸபையில் நடந்த பரீக்ஷையில் முதலாகத் தேறி பரிசு பெற்ருர். அதே ஆண்டில் புதுக்கோட்டை அரசரின் வித்வத் ஸபையில் நடத்தப்பட்ட பரீக்ஷையில் முதலாகத்தேறி விசேஷ மரியாதைகளையும்

அடைந்தார். அது முதல் இவர்புதுக்கோட்டை வித்வத்ஸபை யின் தலைவராகவும், ஆய்வாளராகவும் இருந்து வந்தார். அக்காலத்தில் அத்வைத மதத் தொடர்புள்ள பல சொற் பொழிவுகளை ஆற்றிவந்தார்.

1896-ஆம் ஆண்டில் தனது குருவான கோபால சாஸ் திரிகளுக்குப் பின்னர், சிதம்பரம் பொன்னம்பலப்பிள்ளை பாடசாலையின் தலைமை உபாத்யாயராகத் தண்டபாணி ஸ்வாமி தீக்ஷிதர் நியமிக்கப்பட்டார். அது முதல் பத்தாண்டு காலம் அநேக மாணவர்களுக்கு வ்யாகர்ணம், அலங்கார சாஸ்த்ரம் போன்றவைகளைப் போதித்து வந்தார். அதே சமயம் சிதம்பரத்தில் மெ. ச. வித்யாசாலையின் தலைமை உபாத்யாயராக இருந்த ஹரிஹர சாஸ்திரிகளிடம் நியாயம், வேதாந்தம், ஆகியவற்றைப்படித்துத் தேர்ச்சி அடைந்தார். ஒருக்கால் இராமநாதபுரத்திற்கு அழைக்கப்பட்டு தீக்ஷிதர் பாஸ்கர சேதுபதி அவர்களால் மிகவும் கௌரவிக்கப்பட்டார். பின்னர், தீக்ஷிதர் தனது குரு கோபால சாஸ்திரிகள் வகித்து வந்த ரா. ம. சு. வித்யாசாலையின் தலைமை ஆசிரியப் பதவி யில் நியமிக்கப்பட்டார். அக்காலத்தில் சிரோமணி பரீக்ஷை யில் தேர்வு பெற்றார்.

1911-ஆம் ஆண்டில் காஞ்சியில், நீதிபதி ஸர். ஸுப் ரஹ்மண்ய அய்யரின் தலைமையில் நடந்த மாபெரும் வித்வத் ஸதஸிலும், 1915-ஆம் ஆண்டில் பெங்களூரில் உத்தராதி மடத்தின் ஆதரவில் நடந்த வித்வத் ஸபையிலும், அதே ஆண்டில் காளஹஸ்தியில் ஸர். பி. எஸ். சிவஸ்வாமி அய்ய ரின் தலைமையின் கீழ் நடந்த அத்வைத ஸதஸிலும், பங்கு கொண்ட தண்டபாணி ஸ்வாமி தீக்ஷிதர் தமிழ் நாட்டின் பல பெரியோர்களின் நன்மதிப்பிற்கும் போற்றலுக்கும் பாத்திர மானார்.

1916-ஆம் ஆண்டில் இந்திய சர்க்காரால் மஹா மஹோ பாத்யாயா என்ற பட்டம் தீக்ஷிதருக்கு அளிக்கப்பட்டது. அப்போது இவருக்கு வயது 42. அதே ஆண்டின் இறுதியில் பாரத தர்ம மஹா மண்டலத்தாரால் தீக்ஷிதருக்கு 'சாஸ்த்ரா சார்யன்' என்ற பட்டம் வழங்கப்பட்டது.

மற்றும் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளால் தீக்ஷிதருக்கு 'சாஸ்த்ர ரத்னகரம்', என்ற பிருது



வழங்கப்பட்டது. பாடசாலையில் ஆசிரியராக இருந்து கொண்டே தமது வீட்டில் உணவு முதலிய வசதிகளை அளித்து, பல சிறுவர்களுக்கு வேதாந்தபாடத்தைத் தீக்ஷிதர் கற்பித்து வந்தார். இக்காலத்தில் ஒரு சமயம் ச்ருங்கேரி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளால் திருச்சியையடுத்த பிக்ஷாண்டார் கோவிலில், சங்கர ஜயந்தி மஹோத்ஸவ காலத்தில், சால்வைகளும் தோடாவும் தீக்ஷிதருக்கு வழங்கப்பட்டன. தீக்ஷிதர் திருவாவடுதுறை ஆதீனத்தின் வித்வானகவும் இருந்து வந்தார். மற்றும் சென்னை ஸர்வகலாசாலையில் பாடதிட்ட அமைப்புக் குழுவில் தீக்ஷிதர் அங்கத்தினராக ஒன்பதாண்டுகள் பணியாற்றி இருக்கிறார். இவர் சிறந்த அத்வைத சாஸ்த்ர பண்டிதராயினும், பிற மதங்களிடம் வெறுப்பற்றவராக இருந்தார். இதனலேயே இவர் மத்வ, வைணவ, சைவ ஸபைகளுக்கும் ஆண்டுதோறும் விஜயம் செய்து, பிற மதஸ்தர்களின் நன்மதிப்பையும் பெற்றார்.

தீக்ஷிதர் காசி முதலிய புண்ணிய க்ஷேத்ரங்களுக்குத் தீர்த்த யாத்திரை சென்று, ஆங்காங்கு புகழ்பெற்ற வித்வான்களைச் சந்தித்து, அவர்களால் புகழப்பெற்று ஊருக்குத் திரும்பினர். இவர் சிதம்பரத்தில் தனது ஆசிரியரான மஹா மஹோபாத்யாய ஹரிஹர சாஸ்திரிகளின் ஞாபகார்த்தமாக ஒரு

வேதாந்த பாடசாலையை ஏற்படுத்தினர். தண்டபாணி ஸ்வாமி தீக்ஷிதர் ஒவ்வொருநாளும் இந்தப் பாடசாலைக்குஒரு மணி நேரமாவது சென்று மாணவர்களுக்கு அத்வைத க்ரந் தங்களைப் பாடம் சொல்லி வந்தார்.

ராஜா ஸர், அண்ணுமலை செட்டியாரால் ஏற்படுத்தப் பட்ட மீனுக்ஷி ஸம்ஸ்க்ருதக் கல்லூரியின் முதல்வராக 1924 ஜுலை மாதத்தில் இவர் நியமிக்கப்பட்டார். அக்கல் லூரியில் ஐந்தாண்டுகள் திறம்படப் பணிபுரிந்து பல மாணுக் கர்களைச் சிறந்த முறையில் தேர்ச்சி பெற ஊக்குவித்தார் தீக்ஷிதர். அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தில் துணைவேந்த ராகத் திகழ்ந்த மஹாகனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார் தீக்ஷி தரின் கல்வித்திறனையும், போதிக்கும் திறனையும் பெரிதும் பாராட்டினர். தீக்ஷிதர் சென்னை ஸர்வகலாசாலையின் சிரோ மணி பட்டப்படிப்பு பரீக்ஷைக்குழுவில் பல ஆண்டுகள் அங்கத் தினராகவும்; சில காலம் அதன் தலைவராகவும் பணியாற்றி யுள்ளார். மைஸூர் ஸமஸ்தானத்தில் தசரா வித்வத் ஸதஸின் பரீக்ஷாதிகாரியாகவும் தீக்ஷிதர் பணியாற்றி உள்ளார்.

1929-ஆம் ஆண்டின் மத்தியில் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தீக்ஷிதர் ஸம்ஸ்க்ருதப் பேராசிரியராக நியமிக்கப் பட்டார். இவர் பல்கலைக்கழகத்தின் பாட திட்டக்குழுவின் அங்கத்தினராகவும், மூன்ருண்டுகள் ஸெனட் ஸபையின் அங்கத்தினராகவும் இருந்தார், இக்காலத்தில் பிரதி வருஷ மும் சிறந்த முறையில் தமது இல்லத்திலேயே, தம்முடைய பணத்தைச் செலவழித்தும், சில தனவான்களுடைய உதவி யுடனும் ஒரு அத்வைத ஸதஸ் நடத்தி வந்தார். இதற்கு சிறந்த வித்வான்கள் வரவழைக்கப்பட்டு கௌரவிக்கப் பட்டனர். மற்றும் ‘‘தீக்ஷித ஸமுதாயப் பாடசாலை’’, ஒன்றை ஏற்படுத்தி அதில் ஸ்ரீ நடராஜப்பெருமானின் ஆரா தனைக்குரிய விதி முறைகளையும் மற்றும் வேதம் முதலியவை களையும் கற்பிக்க ஏற்பாடு செய்தார்.

1934-ஆம் ஆண்டில் தண்டபாணிஸ்வாமி தீக்ஷிதரின் மணிவிழா மிகச்சிறப்புடன் நடந்தேறியது. அதில் பல புகழ் பெற்ற வித்வான்களும், பல தனவந்தர்களும், பிரமுகர்களும் பங்கு கொண்டனர். அவ்வமயம் ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள் தீக்ஷிதருக்கு ஒரு மரகத லிங்கத்தையும் பட்டு வஸ்திரங்களையும் அனுப்பிவைத்து அனுக்ரஹித்தார்கள். தீக்ஷிதரிடம் கல்விபயின்று மேன்மை அடைந்த சீடர்கள் பலர். அவர்களுள் ஒருவர் 'வேத சாஸ்த்ர தரங்கிணி விலாஸம்' என்ற ஒரு பாமாலையை தீக்ஷிதரின் பேரில் இயற்றியுள்ளார்.

தண்டபாணிஸ்வாமி தீக்ஷிதர் பல நூல்களை இயற்றி யுள்ளார். நடராஜ ஸஹஸ்ரநாமத்திற்குப் பாஷ்யம் எழுதி யுள்ளார். புண்டரீகபுர மஹாத்ம்யம் என்ற சிதம்பர க்ஷேத்ர புராணத்தைப் பரிசோதித்து அச்சிட்டுள்ளார். இவருடைய முன்னோரான மீனாக்ஷிநாத தீக்ஷிதர் இயற்றிய 'சிதம்பர தத்வ நிர்ணயம்' என்ற நூலைப் பிரசுரித்துள்ளார். இப்படி பலதுறைகளில் புகழும் பெயரும் பெற்ற தண்டபாணிஸ்வாமி தீக்ஷிதர் எக்காரணத்தைக் கொண்டும் தில்லையம்பதியை விட்டு வெளியிடங்களில், பால்யப்பருவத்திற்குப்பின், சில தினங்களுக்கு மேல் வசித்தது இல்லை. எக்காரணத்தைக் கொண்டும் யாரிடமும் குறை காண மாட்டார்; இகழ்ச்சியாக வும் பேசமாட்டார், தனது ஆயுட்காலம் முழுவதும் ஸ்ரீ நட ராஜப் பெருமானின் ஸேவையிலும், வ்யாகர்ண வேதாந்த சாஸ்திரங்களைக் கற்பிப்பதிலும் ஈடுபட்டு, தண்டபாணி ஸ்வாமி தீக்ஷிதர் உயர்ந்த இலக்குகளுடன் வாழ்ந்தவர்களில் ஒருவராவார். இப்படிப் புகழுடன் திகழ்ந்த தீக்ஷிதர் சிதம்பரத் தில் 1943-ஆம் ஆண்டு ஸெப்டம்பர் மாதம் முதல் வாரத்தில் சிவபதமடைந்தார்.

---

# வெள்ளூர் ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள்

திருச்சிராப்பள்ளி நகரத்திற்குச் சுமார் பதினைந்து மைல்கள் மேற்கில், அகன்று பாயும் காவிரியின் இடது கரையில் வெள்ளூர் என்ற ஒரு சிற்றூருள்ளது. இங்கு முற்காலத்தில் பல வேத விற்பன்னர்களும், அநேக சாஸ்த்ர வித்வான்களும் வசித்துவந்தனர். அவ்வூரில் பல்லாண்டுகளுக்கு முன் வாழ்ந்த ரங்கநாத சாஸ்திரிகள் என்று புகழ் வாய்ந்த, பல சாஸ்த்ரங்களைக் கற்றறிந்து, கர்மானுஷ்டானங்களை நல்ல முறையில் நடத்திவந்து, வைராக்ய ஸம்பன்னராக மாறி துறவறம் பூண்டு, ஸித்தியடைந்த பெரியவர் ஒருவருண்டு. அவருடைய பிள்ளைகள் இருவர்,- ஈச்வர சாஸ்திரி, ராம சாஸ்திரி என்பவராம். இளையவரான ராமசாஸ்திரிகளுக்கு முதல் தாரம் இளமையிலேயே இறக்க, அவர் மறுபடி மணம் செய்துகொண்டார். இரண்டாவது மனைவியிடம் ராமசாஸ்திரிகளுக்குப் பிறந்த நான்கு பிள்ளைகளுள் இரண்டாவது மகனே ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி. 1869-ஆம் வருடம் (சுக்ல ஞூ) அக்டோபர் மாதத்தில் இவர் தோன்றியதாகத் தெரிகிறது. இளமையிலேயே தாயை இழந்த ஸுப்ரஹ்மண்யத்தையும் பிற மூன்று ஆண்குழந்தைகளையும், இரு மகள்களையும், தகப்பனார் சிறந்த கவனத்துடன் வளர்த்து வந்தார்.



ஏழாம் வயதில் கிரமமாக உபநயனம் செய்விக்கப்பட்ட ஸுப்ரஹ்மண்யன் வேதாத்யயனம் செய்வதற்காகத் திருச்சி யருகே, காவிரியின் தென்கரையிலுள்ள, அந்தநல்லூர் கிராமத்திற்குச் சென்று, ஆங்கு ஒரு ஸன்யாஸியின் ஆதரவில் இருந்து, பிக்ஷை எடுத்துச் சாப்பிட்டுக்கொண்டு, தம்முடைய தைத்ரீய வேத சாகையை அத்யயனம் செய்து வந்தார். இப்படி அந்தநல்லூர் கிராமத்தில் நியமாத்யயனம் செய்து வந்த காலத்தில் இவர் தகப்பனையும் இழந்தார். வேதத்தில் மூலமான பாகங்களை அத்யயனம் செய்து முடித்த பின், திருவையாற்றில் வேதமோதுவதில் அக்காலத்தில் தமிழ் நாட்டிலேயே சிறந்து விளங்கிய ஸ்ரீ முத்துகனபாடிக ளிடம் கனுந்தம் வேதாத்யயனம் செய்து முடித்தார் ஸுப்ரஹ் மண்ய சாஸ்திரி. அப்போது இவருக்கு பதினெட்டு வயது. பிறகு இவர் முசிரி கிராமம் சென்று, ஆங்கு தங்கி, பரமேச்வர சாஸ்திரிகள் என்ற வித்வானிடம் காவ்யம், நாடகம் போன்ற ஸாஹித்ய சாஸ்திரப் பகுதிகளைக் கற்றறிந்தார், பின்னர் முசிரிக்கருகே கிழக்காக உள்ள சிறுகாம்பூர் கிராமத்தில் புக ழுடன் திகழ்ந்த ஸுப்ரஹ்மண்ய கனபாடிகளிடம் ஸித்தாந்த கௌமுதீ என்ற நூலைப் படித்ததுடன் வேதலக்ஷணப்பகுதி களையும் கற்றுக்கொண்டார்.

இப்படி வேதலக்ஷணம், பூர்வாபரப்ரயோக முறைகள் யாவும் கற்றறிந்த போதிலும், புரோஹிதம் செய்யும் வாழ்க் கையை மேற்கொள்ளாது, தம் சாஸ்திர அறிவை வளர்த்துக் கொள்ளும் நோக்கத்துடன், ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி, தஞ்சாவூர் ஜில்லாவைச் சேர்ந்த மன்னார்குடி நகரத்தை யடைந்து, ஆங்கு பல சாஸ்திரங்களையறிந்து பல சீடர்களுக் குப் போதித்து வந்த மஹாமஹோபாத்யாய த்யாகராஜமகி என்ற ஸ்ரீ ராஜு சாஸ்திரிகளிடம் இவர் தர்க்க சாஸ்த்ரம், வேதாந்தம் முதலியவற்றில் அறிவு பெற்றார். இவருடன் மன்னார்குடிப் பெரியவரிடம் படித்தவர்களுள் பைங்காநாடு கணபதி சாஸ்திரிகள், யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள் ஆகியோர் முக்யமானவர். மன்னார்குடியில் படித்து வந்த காலத்தில் கும்பகோணம் அத்வைத ஸபையின் ஸதஸ்களுக்கு சாஸ்திரி

யார் தவருது போய்வருவார். பகவத்பாத சங்கரரின், ப்ரஸ் தானத்ரயமெனும், ஸூத்ரபாஷ்யம், கீதாபாஷ்யம், உபநிஷத்பாஷ்யங்கள் ஆகியவற்றை கற்றுணர்ந்தபின், ஆங்கரை கிராமத்தைச்சேர்ந்த ஒருவைதிக குடும்பத்துப்பெண்ணை திருமணம் செய்து கொண்டு இல்லற தர்மத்தைக் கடைப் பிடிக்கத் தொடங்கினுர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள். இவருடைய தாய்வழிப் பாட்டனுரும், ஆங்கரையில் வஸித்துவந்தால் இவர் அடிக்கடி ஆங்கரைக்கிராமத்திற்குச் சென்று வருவார். இதனுல் இவருக்கு 'ஆங்கரை ஸுப்பராய கனபாடி' என்ற பெயர் விளங்கலாயிற்று. ஸ்ரீயக்ஞஸ்வாமி சாஸ்திரிகள் இயற்றியுள்ள ''த்யாகராஜ விஜயம்'' என்ற ஸம்ஸ்க்ருத நூலில்கூட இவர், 'ச்ரத்தையுள்ள, புத்திமானை, ஒழுக்கமுடைய, புகழுக்குரிய ஆங்கரை ஸுப்பராய கனபாடி' எனக் கூறப்பட்டுள்ளார்.

பின்னர் மைஸூர் ராஜ்யத்தில் ஒரு முக்ய நீதிபதியாக விளங்கிய, தஞ்சை ஜில்லா பனங்குடி கிராமத்தைச் சேர்ந்த ஏ. ராமச்சந்திரய்யரின் நட்பு ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகளுக்குக் கிட்டியது. அன்னுரின் வேண்டுகோளுக்கிணங்கி, சாஸ்திரிகள் பங்களூர் நகரத்திற்குச் சென்று, அவருக்கு அத்வைத க்ரந்தங்களை சிறிது காலம் போதித்து வந்தார். பங்களூரில் சாஸ்திரிகள் வசிக்கத் தொடங்கிய காலத்தில், ந்யாய வேதாந்த சாஸ்த்ரங்களில் மாபெரும் அறிஞராக விளங்கிய ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபினவ நரஸிம்மபாரதி ஸ்வாமிகள் ச்ருங்ககிரி ஆசார்ய மடத்தில் பீடாதிபதிகளாக விளங்கிவந்தார். அப்பெரியவர்களிடம் அத்வைத வாதக்ரந்தங்களைக் கற்கவேண்டு மென்ற எண்ணம் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகளின் மனதில் தோன்றியது. எனவே இவர் பங்களூரிலிருந்து ச்ருங்கேரி சென்று, ஸ்ரீ ஸ்வாமிகளைத் தரிசித்து, தமது விருப்பத்தை வெளியிட்டார். பலவருடங்கள் ச்ருங்கேரியில் தங்கியிருந்து, ஸ்வாமிகளிடம் சாஸ்திரியார் மறுபடி ப்ரஸ்தானத்ரயங்களையும், ஸித்திப்ரஹ்மானந்தீயம் போன்ற கிரந்தங்களையும் படித்தார். அக்காலத்தில் சாஸ்த்ரியாருடன் புகழ்பெற்ற ந்யாயசாஸ்த்ர அறிஞரான ஸ்ரீ விரு

பாக்ஷி சாஸ்திரிகளும் படித்தனராம். ஸ்ரீ விருபாக்ஷி சாஸ்திரிகளிடம் ந்யாய சாஸ்த்ரத்தின் மேலான கருத்துக்களைப் படித்துக்கொண்டு சாஸ்திரியார் அவருக்கு வேதாத்யயனம் செய்வித்தாராம். இதே ஸமயத்தில் வேதாந்த மேல்படிப்பை உத்தேசித்து ச்ருங்கேரி வந்து சேர்ந்த நேமம் வைத்யநாத சாஸ்திரிகளிடம் 'பாட்டதீபிகை' போன்ற க்ரந்தங்களை சாஸ்திரியார் கற்றுக்கொண்டார். ச்ருங்கேரியில் இப்படிச் சில ஆண்டுகள் சாஸ்த்ராப்யாஸத்திலேயே கழிந்தன.

பூர்ணமான வேதாத்யயனமும், நிரம்பிய சாஸ்த்ர அறிவும், சிறந்த ஆசாரத்துடன் கூடிய கர்மானுஷ்டானமும் ஒருங்கே அமையப் பெற்றிருந்த ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள் ஸ்ரீ சிவாபினவ நரஸிம்ம பாரதீ ஸ்வாமிகளின் அன்பிற்குப் பாத்திரமானதின் பயனாக, சாஸ்திரிகள் ச்ருங்கேரி மடத்தின் ஆஸ்தான வித்வானாக நியமிக்கப்பட்டார். 1907-ஆம் ஆண்டில் ஸ்ரீ ஸ்வாமிகளுடன் காலடியில் நடந்த ஸ்ரீ சாரதா, ஸ்ரீ ஆசார்ய மூர்த்திகளின் பிரதிஷ்டை வைபவங்களுக்குச் சாஸ்திரிகள் யாத்திரை சென்று, பின்னர் ஸ்வாமிகளுடன் 1911-ஆம் ஆண்டில் ச்ருங்கேரி திரும்பினார். சிறிது காலம் கழித்து, பங்களூரில் சங்கரபுரப்பகுதியில், ச்ருங்கேரி ஆசார்யாள் 'பாரதீய கீர்வாணப்ரௌட வித்யாபிவர்த்தனீ' என்ற பெயரில் ஒரு பாடசாலையை நிறுவினார்கள். ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள் இப்பாடசாலையில் வேதாந்த ஆசிரியராக நியமனம் பெற்றார். சுமார் ஆறு ஆண்டுகாலம் இப்பதவியை வஹித்து பலசீடர்களுக்குத்திறம்பட பாடம் கற்பித்து வந்தார்.

இவர் பங்களூர் பாடசாலையில் பணிபுரிந்து வந்த காலத்தில் சங்கரபகவத்பாதரின் ஸூத்ரபாஷ்யத்தின் விரிவுரையான பாமதீ, அதற்குரையான கல்பதரு, அதன் வ்யாக்யானமான பரிமளம், ஆகியவற்றைச் செவ்வனே சோதித்து அச்சிடும் பணியை உத்தேசித்து, ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் ஆக்ஞைப்படி ஒரு குழு நியமிக்கப்

பட்டது. இக்குழுவின் நோக்கான பணியை மேற்கொண்டு, மேற்கூறப்பட்ட நூல்களின் பல ஏட்டுச்சுவடிகளை ஆதாரமாகக் கொண்டு, நன்கு சோதித்து, அவைகளை நல்லமுறையில் ஸ்ரீரங்கம் வாணி விலாஸ அச்சகத்தினர் அச்சிட்டு, பிரசுரிப்பதில் பெரிதும் உதவியவர்கள் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகளும், நேமம் வைத்தியநாத சாஸ்திரிகளுமேயாவர்.

சில ஆண்டுகளுக்குப்பின் சாஸ்திரியார் ச்ருங்கேரி மடத்தின் அனுமதி பெற்று, மைஸூர் சென்று, அங்கு மஹாராஜா ஸம்ஸ்க்ருதக் கலாசாலையில் தலைமைவேதாந்த ஆசிரியராகச் சிறிது காலம் பணியாற்றினர். மஹாராஜாவின் அன்பைப்பெற்று ஸமஸ்தான மஹா வித்வானாகவும், தர்மாதிகாரியாகவும் நியமனம்பெற்ருர். ஆனல் காலத்தின் கொடுமையால் இவர் அதிக காலம் இப்பதவிகளிலிருக்கவில்லை. 1917-ஆம் ஆண்டு மத்தியில் நோய்வாய்ப்பட்டு, நவம்பர் மாதத்தின் தொடக்கத்தில் வைத்யர்களின் ஆலோசனையின்படி, சாஸ்திரியார் ஆங்கரை கிராமத்திற்கு வந்து சேர்ந்தார். சுமார் இரண்டு வாரங்கள் ஆரோக்யமற்ற நிலையில் இருந்து, அம்மாதம் (1917 நவம்பர்) 16-ஆம் நாள் சாஸ்திரிகள் சிவபதமடைந்தார்கள்.

சிறந்த அறிஞர் வழித்தோன்றி, தன்னுடைய ஊக்கத்தாலும், உழைப்பாலும், ஆர்வத்தாலும் மேலான அறிவைப் பெற்றும், ஆசாரசீலருமாகத் திகழ்ந்த ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகளுக்குப் புகழும், பிருதுகளும் கிட்டியதில் வியப்பு ஒன்றுமில்லை. 1913-ஆம் ஆண்டு டிஸம்பர் மாதத்தில் இவருக்கு பிரிட்டிஷ் இந்திய அரசு 'மஹாமஹோபாத்யாய' பிருதை வழங்கி கௌரவித்தது. 1916-ஆம் ஆண்டில் ச்ருங்ககிரியில் ஸ்ரீ சந்த்ரசேகரபாரதி ஸ்வாமிகள், ஸ்ரீ சாரதாம்பிகையின் கும்பாபிஷேக வைபவ காலத்தில், சாஸ்திரிகளுக்கு ''ச்ருதி சிரோபூஷணம்'' என்ற பிருதையும், இரண்டு தோடாக்களையும், இரட்டைச் சால்வைகளையும் அனுக்ரஹித்தார்கள்.

# ஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள்

தமிழ்நாட்டிலேயே புகழ்பெற்ற மஹா வித்வானக விளங்கிய ஸ்ரீ ராஜு சாஸ்திரிகளின் ஸ்வீகாரக் குமாரரின் புதல்வரே யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள். ஸ்ரீ ராஜு சாஸ்திரிகள் தமது அறுபதாம் வயதில் ஸோமயாகம் செய்தார்கள். அடுத்த ஆண்டில் சாஸ்திரிகள் அவர்களின் ஸ்வீகாரக் குமாரனுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. யாகம் செய்ததின் பயனுகப் பேரக்குழந்தை பிறந்ததாக எண்ணி மன்னார்குடி சாஸ்திரிகள் அவர்கள் குழந்தைக்கு 'யக்ஞஸ்வாமி' என்று பெயர் வைத்தார்கள். யக்ஞஸ்வாமி தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த ஆடுதுறையை யடுத்த மருத்துவக்குடியில் யுவ வருடம் மார்கழி மாதம் கடைசிநாளில் புஷ்ய நக்ஷத்திரத்தில் (1875-ஆம் ஆண்டு) பிறந்தார்.



குழந்தைப் பருவத்தில் இவருடைய தாய்வழிப் பாட்டன் வீட்டிலேயே வளர்ந்து வந்தார். தாய்வழிப் பாட்டனை

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

சங்கரபகவத்பாதரின் உபநிஷத் பாஷ்யத்திற்கு ஆனந்தகிரி இயற்றிய விவரணத்திற்கும், ஸாதனபஞ்சகம், சதச்லோகி ஆகியவற்றிற்கும் விரிவுரைகளெழுதும் நோக்குடன் சில குறிப்புகளை எழுத ஆரம்பித்த இவருடைய நோக்கம் உருப்பெருது போனது வருந்தத்தக்கது.

ஸ்வாமி சாஸ்திரிகள் நல்ல இசைப் புலவர். வயதான காலத்தில்கூட நன்ருகப் பாடுவார். சிறுவயதிலேயே யக்ஞ ஸ்வாமி பாட்டனுர் பாடும் பாட்டுக்களை நன்கு கவனித்துக் கேட்பார். ஏழாவது வயதில் யக்ஞஸ்வாமியை அழைத்து வரச்செய்து மன்னுர்குடிப் பெரியவர் பேரனுக்கு உபநயனம் செய்து வைத்து, தன்னுடைய நெருங்கிய உறவினரான கூத்தம்பாடி ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகளிடம் வேதாத்ய யனம் செய்யும்படி ஏற்பாடு செய்தார். ஐந்தாண்டுகளுக்குப் பிறகு வேதாத்யயனம் முடிந்தது. அப்போது காவ்ய பாடமும் தர்க்க சாஸ்திரமும் படிப்பதற்காக மன்னுர்குடியிலேயே வாழ்ந்து வந்த ராதாநரஸிம்ஹபுரம் நீலகண்ட தீக்ஷிதரிடம் யக்ஞ ஸ்வாமி அனுப்பப்பட்டார். நான்காண்டுகள் அவரிடத் தில் நாடகம், சம்பூ, தர்க்கம், வ்யாகர்ணம் ஆகியவற்றில் அடிப்படை அறிவை யக்ஞஸ்வாமி அடைந்தார். இதன் பின்னர் மன்னுர்குடி சாஸ்திரிகள் அவர்களே பேரப்பிள்ளைக் குத் தர்க்கம், வேதாந்தம், வ்யாகர்ணம் முதலிய சாஸ்திரங் களைப் போதித்து வந்தார். இப்படி எட்டாண்டுகளில் பெரிய வர்களிடம் சாஸ்திர பாடங்களை யக்ஞஸ்வாமி கற்றறிந்தார். யக்ஞஸ்வாமி சாஸ்திரிகளுடன்கூட மன்னுர்குடி சாஸ்திரி களிடம் படித்தவர்களில் பழமார்நேரி ஸ்வாமிகளும், கணபதி சாஸ்திரிகளும் முக்யமானவர். மன்னுர்குடி சாஸ்திரிகளின் அனுக்ரஹத்தால் பேரப்பிள்ளையும் சிறந்த வித்வானுக காட்சியளித்தார். பெரியவர்களுக்கு எண்பது வயது பூர்த்தி யான பின் அவரிடம் படிக்க வந்த மாணவர்களுக்குப் பெரும் பாலும் யக்ஞஸ்வாமி சாஸ்திரிகளே பாடம் சொல்லிவந்தார். இவருடைய சிறந்த மேதா விலாஸத்தைக் கண்டு பாட்டனுர் பலமுறை மகிழ்ச்சியடைந்தாராம்.

யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள் சாஸ்திரக் கல்வி பயில்வது டன் தன்னுடைய ஸங்கீத ஞானத்தையும் பெருக்கி வந்தார். இவருக்கு இனிமையான சாரீரம் இருந்தது. பாட்டனுரின் வீட்டுக்குப் பக்கத்தில் உள்ள சிறுவீட்டில் ஓர் அறையில் உட்கார்ந்துகொண்டு தம்பூராவுடன் தனிமையில் இசைப் பயிற்சி செய்வார். இப்படியாக யக்ஞஸ்வாமி சாஸ்திரி

களின் ஸங்கீத ஞானமும் ஸாஹித்ய அறிவும் சாஸ்த்ர ஞானத்திற்கு உதவியாக வளர்ந்து வந்தன.

மன்னார்குடிப் பெரியவர் மறைவிற்குப் பிறகு அவருடைய ஞாபகார்த்தமாக மன்னார்குடியில் பத்து மாணக்கர்கட்கு ஸம்ஸ்க்ருத பாடம் கற்பிக்கும் ஏற்பாட்டுடன் அவ்வூர் தன வந்தர்களால் ஒரு பாடசாலை ஆரம்பிக்கப்பட்டது. காலப் போக்கில் அவர்களுடைய உதவி குறைந்து போயினும் யக்ஞ ஸ்வாமி சாஸ்திரிகள் அப்பாடசாலையைத் தன் வீட்டிலேயே வைத்து, சுமார் பதினைந்தாண்டுகள் பாடம் சொல்லிக் கொண்டு பராமரித்து வந்தார். முதலில் இப்பாடசாலையில் சாஸ்திரிகளுக்கு உதவியாகப் பாடம் சொல்லி வந்தவர் களில் இவருடைய சிஷ்யரான தேவங்குடி சிவராமகிருஷ்ண சாஸ்திரிகள், முக்யமானவர். பின்னர் மன்னார்குடி வைத்ய நாத தீக்ஷிதர், கோபாலஸமுத்ரம் கிருஷ்ணமாச்சாரியார் முதலியோர் பாடசாலையில் பாடம் சொல்லி வந்தனர். மன்னார்குடியில் யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள் வசித்து வந்த காலத்தில் அவரிடம் தர்க்கம், வேதாந்தம் முதலியவை படித்தவர்களில், தேவங்குடியைச் சேர்ந்த சிவராமகிருஷ்ண சாஸ்த்ரிகள், சிமிழி வேங்கடராம சாஸ்திரிகள், இஞ்சிக் கொல்லை ஐகதீச சாஸ்திரிகள் முதலியவர்கள் முக்யமானவர் களாவர்.

1904-ஆம் ஆண்டில் யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள் தனது பாட்டனாரின் சரித்திரத்தை 'த்யாகராஜ விஜயம்' என்ற சம்பூ காவ்யமாக எழுதி வெளியிட்டார். இக்காவ்யம் ஐந்து உல்லாஸங்களைக் கொண்டது. இக்காவ்யம் பல வித்வான் களுடைய மனதைக் கவர்ந்தது. 1912-ஆம் ஆண்டுக்குப் பின் சிறிதுகாலம் கோவிந்தன் என்ற இசையறிவுள்ள ஒரு சிஷ்யனை அடைந்து, சாஸ்திரிகள் அவனுக்குப் பாடம் போதிக்கும் வகையில் தானும் சிறந்த த்யாகராஜ, தீக்ஷித க்ருதிகளைப் பாடிவந்தார். மற்றும் ராயபுரம் ஸ்ரீநிவாஸ பாகவதர் என்பவருக்காகப் பல கதைகளையும் சாஸ்திரிகள் தயாரித்துக் கொடுத்தார்.

சாஸ்திரிகளின் உபன்யாஸங்களைக் கேட்ட பல கனவான்கள் சாஸ்திரிகளிடம் பெரும் மதிப்பு வைத்திருந்தார்கள். 1911-ஆம் ஆண்டில் டில்லியில் நடந்த ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் முடிசூடு விழாவில் சாஸ்திரிகள் கலந்து கொள்ளுமாறு நங்கவரம் ராஜப்பய்யர் ஏற்பாடு செய்திருந்தார். ஆனால் தகப்பனாரின் உத்தரவிற்கிணங்க சாஸ்திரிகள் டில்லிக்குச் செல்லாமல், 'ஜார்ஜ் பட்டாபிஷேக அபிநந்தன நவரத்னமாலிகா' என்ற ஒரு சிறு காவ்யத்தை இயற்றி அனுப்பிவிட்டார். சில ஆண்டுகள் கழிந்து மன்னார்குடி வாசிகளின் வேண்டுகோளுக்கிணங்க, யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள், மன்னார்குடி வேம்பு கனபாடிகள், ரங்காச்சாரியார் முதலியோர் மூலக்ரந்தத்தை இசையுடன் படிக்க, ராமாயண ப்ரவசனம் செய்ய ஆரம்பித்தார். இப்படி ஆரம்பிக்கப்பட்ட புராண ப்ரவசனங்கள் மன்னார்குடி, கும்பகோணம், மாயூரம் ஆகிய பல இடங்களில் சுமார் எட்டாண்டு காலம் ப்ரவசன மழையாகப் பொழிந்தது.

சாஸ்திரிகள் புராண ப்ரவசனத்தைத் தவிர வேறு ஸங்கீதக் கச்சேரிகளுக்கோ, நாடகங்களுக்கோ செல்வது வழக்கமில்லை. ஆனால் ஸங்கீத வித்வான்களைத் தம்மிடம் வரவழைத்து, அவர்களுடைய இன்னிசையைக் கேட்டு மகிழ்வார். பலதரப்பட்ட வித்வான்களும் சாஸ்திரிகளிடம் தங்களுடைய ஸங்கீத ஞானம், சாஸ்த்ர ஞானம், பிற கலைகளில் தேர்ச்சி முதலியவற்றை அற்பணித்து மகிழ்வார்கள். கருங்குளம் க்ருஷ்ண சாஸ்திரிகளுக்குப் பிறகு, 1920-ஆம் ஆண்டுமுதல் 1938-ஆம் ஆண்டு வரையில் யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள் கும்பகோணம் அத்வைத ஸபையில் முக்யப் பண்டிதராக இருந்து வந்தார். 1917-ஆம் ஆண்டில் ஒரு சமயம் சாஸ்திரிகள் நோய்வாய்ப்பட்டிருந்தார். அக்காலத்தில் ஒருநாள் யாரோ ஒருவன் பெரிய வீட்டின் உள்ளறையில் ஒரு பீரோவில் வைக்கப்பட்டிருந்த சாஸ்திரிகளுக்கு வெகுமதிகளாக அளிக்கப்பட்ட சால்வைகள், பட்டுகள், விலையுயர்ந்த ஆடைகள் முதலியவைகள் கட்டி வைக்கப்பட்டிருந்த மூட்டையைத் திருடிச் சென்று விட்டான். மூட்டை திருட்டு

போனதைச் சிலகாலம் ஒருவரும் பார்க்கவில்லை. பின்னொரு சமயம் சாஸ்திரிகள் உடல்நிலை நன்றான பிறகு வீட்டில் யாரோ மூட்டை களவுபோனது பற்றி அவரிடம் சொன்னார்கள். இதைக் கேட்ட சாஸ்திரிகள், "க்ருஷ்ணார்ப்பணம்" என்று சொல்லி அச்சம்பவத்தைச்சில செய்யுள்களைக்கொண்ட "க்ருஷ்ணார்ப்பண விம்சதி" என்ற சிறு காவ்யமாக வடித்தார்கள். இது சாஸ்திரிகளின் பற்றற்ற தன்மையையும் க்ருஷ்ணபக்தியையும் விளக்குகின்றது.

பூனாவில் அப்பா சர்மா என்ற ஒரு மஹாவித்வான் ஸம்ஸ்க்ருத மொழிக்கும் சாஸ்த்ரங்களுக்கும் மிகுந்த ஸேவை செய்து வந்தார். அவர் 'ஸம்ஸ்க்ருத வாஹினீ' என்ற ஒரு வாரப் பத்திரிகையையும் மற்றொரு மாதப் பத்திரிகையையும் நடத்திவந்தார். அவருடைய பத்திரிகைகளை வரவழைத்து சாஸ்திரிகள் தானும் படித்து, சிஷ்யர்களையும் படிக்கச் செய்வார். மற்றும் அவருடைய பத்திரிகைகளுக்குத் தாமே கட்டுரை வழங்கி வந்தார்.

சாஸ்திரிகள் அவர்களுக்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி அவர்கள் 'சாஸ்த்ர ரத்னாகரம்' என்ற விருதை அனுக்ரஹம் செய்தார்கள். மற்றும் சாஸ்திரிகள் அவர்களுக்கு இந்திய அரசாங்கம் மஹா மஹோபாத்யாய விருதை அளித்து கௌரவித்தது. இவையன்றி 'சாஸ்த்ர திலகம்' என்ற விருதையும் சாஸ்திரிகள் பெற்றிருந்தார். இப்படி புகழுடன் சிறந்த கல்விமானாக விளங்கிய யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள் தனது 64-வது வயதில், 1940-ஆம் ஆண்டில் பிப்ரவரி மாதம் 6-ஆம் தேதி சிவபதம் அடைந்தார்.



# கருங்குளம் ஸ்ரீ க்ருஷ்ண சாஸ்திரிகள்

தமிழ்நாட்டின் தென்கோடிப் பகுதியில் திருநெல்வேலி ஜில்லாவில் தாமிரபர்ணி செழிப்புறச் செய்யும், கருங்குளம்



என்ற சிற்றூரிலே 1876-ஆம் ஆண்டில் பிறந்தவர் க்ருஷ்ண சாஸ்திரியார். சிறுவயதிலேயே சாஸ்திரங்களைக் கற்க வேண்டுமென்ற அவாக்கொண்ட இவர் 1892-ஆம் ஆண்டில் தம்மூரைவிட்டுப் புறப்பட்டுச் சிதம்பர க்ஷேத்திரத்தை அடைந்தார். ஆங்கு புகழ் மேவிட்ட வித்வானன ஹரிஹர சாஸ்திரிகளை அணுகி அவரிடம் கல்வி பயில ஆரம்பித்தார். அவரிடம் ந்யாயம், வேதாந்தம் ஆகியவற்றை சில ஆண்டுகளில் கற்ருர். பின்னர் தஞ்சை ஜில்லாவில் வேதாரண்யத்திலிருந்த ஒரு சாஸ்த்ர பாடசாலையில் ஆசிரியராக அமர்ந்து சில ஆண்டுகள் செவ்வனே பணியாற்றினர்.

1912-ஆம் ஆண்டில் க்ருஷ்ண சாஸ்திரிகள் கும்பகோண நகரத்திற்கு வந்து சேர்ந்தார். ஆங்கு அத்வைத ஸபையின் பண்டிதராக ஏழாண்டுக் காலம் இருந்து சிறந்த முறையில் பலருக்கு அத்வைத வேதாந்தத்தைக் கற்பித்து வந்தார். 1919-ஆம், ஆண்டில், கேரளத்தில் சித்தூரில் அக்காலத்தில் சிறப்புடன் விளங்கிய ஸம்ஸ்க்ருத பாடசாலையின் தலைமை ஆசிரியராகப் பதவியேற்று அங்கும் ஏழாண்டுகள் திறனுடன் பணியாற்றினர். 1926-ஆம் ஆண்டில் சித்தூர் பாடசாலை

யிலிருந்து விலகிய சாஸ்திரியார், சென்னை மயிலாப்பூர் ஸம்ஸ்க்ருதக் கல்லூரியின் முதல்வராக 1927-ஆம் ஆண்டில் பதவி ஏற்றார். பதினொரு ஆண்டுகள் அப்பதவியை அணி செய்த க்ருஷ்ண சாஸ்திரிகள் அக்கல்லூரியில் பல சீர்திருத் தங்களைச் செய்து, அதன் மதிப்பை உயர்த்தினார். இவர் முதல்வராகப் பணியாற்றிய காலத்தில்தான், 1932-ஆம் ஆண்டில் நவராத்ரி காலத்தில் சென்னைக்கு விஜயம் செய்த காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் இக்கல்லூரியில் சிறிதுகாலம் தங்கியிருந்தார்கள். சாஸ்திரிகளுக்கு ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் 'சாஸ்த்ர ரத்னா கரம்' என்ற விருதை வழங்கி அனுக்ரஹித்தார்கள். மைலாப்பூர் ஸம்ஸ்க்ருதக் கல்லூரியின் முதல்வராகத் திகழ்ந்த காலத்தில்தான் சாஸ்திரியாருக்கு 'மஹா மஹோ பாத்யாய' என்ற பட்டம் இந்திய அரசாங்கத்தினரால் வழங்கப்பட்டது.

1938-ஆம் ஆண்டில் மைலாப்பூர் கல்லூரியிலிருந்து ஓய்வுபெற்ற க்ருஷ்ண சாஸ்த்ரிகள், அடுத்த ஆண்டில் (1939) துறவறம் பூண்டு சிறிது காலத்திற்குப் பின் அதே ஆண்டில் ஸித்தியடைந்தார். இவர் இயற்றிய நூல்களுள் சிறந்ததாகக் கணக்கிடப்படுவதான 'ப்ரஹ்ஸூத்ரானு குண்யஸித்தி' என்பது வ்யாஸரின் ப்ரஹ்ஸூத்ரங்கள் சங்கரபகவத்பாதரின் அத்வைத தத்வத்தையே நிரூபணம் செய்கிறதெனத் தெளிவுபடுத்துகிறதாம். 'அதிகரண சதுஷ்டயீ' என்பது இவர் இயற்றிய மற்றொரு சிறந்த நூலாகும். தமிழ்மொழியில் 'வேதாரண்ய மாஹாத்மியம்' என்ற ஒரு சிறு புராண நூலையும் சாஸ்திரியார் இயற்றியுள்ளார்.

---

# ஸ்ரீ குப்புஸ்வாமி சாஸ்திரிகள்

செழுமைமிக்க தஞ்சை மாவட்டத்தில், ஐந்தாறுகள் பாய்கின்ற திருவையாற்றையடுத்த கணபதி அக்ரஹாரம் எனும் கிராமத்தில், 1880-ஆம் ஆண்டு டிஸம்பர் மாதம் 15-ஆம் நாளில், கணபதி அய்யர் என்றவருடைய மகவாகத் தோன்றினார் குப்புஸ்வாமி சாஸ்திரிகள். நல்ல வடிவமும், சிறந்த புத்தி கூர்மையும் படைத்த குப்புஸ்வாமி இளமையிலே நன்குபடிக்க ஆரம்பித்தார். தமது 16-ஆம் பிராயத்தில் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேர்வடைந்து, தஞ்சாவூர் எஸ்.பி.ஜி. கல்லூரியில் சேர்ந்து மேற்கல்வி பயின்றார். 1900-ஆம் ஆண்டில் தத்வசாஸ்த்ரப் படிப்பில் பி. ஏ. பட்டம் பெற்றார். இவர் திருவையாற்றில் விளங்கிய ஸ்ரீ வாஸுதேவ ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமியிடம் அத்வைத சாஸ்திரம் படித்தார்.



பின்னர் சென்னை அரசாங்க ரெவின்யூபோர்டு அலுவலகத்தில் சிறிதுகாலம் குமாஸ்தாவாகப் பணியாற்றினார். பிறகு சென்னையிலும், திருவனந்தபுரத்திலும் சட்டப் பயிற்சி பெற்று, 1905-ஆம் ஆண்டில் எம். ஏ. பட்டம் பெற்றார். அடுத்த ஆண்டில் சென்னை மைலாப்பூர் ஸம்ஸ்க்ருதக்

கலாசாலையின் முதல்வராக நியமிக்கப்பெற்ருர். நான்கு ஆண்டுகாலம் அப்பதவியைச் செவ்வனே வஹித்தார். 1907-ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஸம்ஸ்க்ருதத் தேர்வு ஆய்வாளர் குழுவின் தலைவரானுர். 1910-ஆம் ஆண்டில் திருவையாற்றிலுள்ள ராஜா ஸம்ஸ்க்ருதக் கல்லூரியைச் சீர்படுத்தி, அதன் முதல்வரானுர். திருவையாற்றில் வசித்து வந்தக்கால், ஸ்ரீரங்கம் வாணீ விலாஸ அச்சகத்திற்காக, அச்சிடும் பொருட்டு 'அதர்வ மீமாம்ஸ குதூஹல வ்ருத்தி' என்ற கிரந்தத்தைத் தொகுத்துதவினுர். 1910 முதல் 1914 வரை திருவையாற்று அரசர் கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றிய காலத்தில்தான் குப்புஸ்வாமி சாஸ்திரிகள் முன்னர் கூறப்பட்ட அச்சகத்தில் பிரசுரிக்கப் பட்ட பகவத்பாத சங்கரரால் இயற்றப்பட்ட பல முக்ய ஸம்ஸ்க்ருத நூல்களைப் பரிசோதித்து தொகுத்து உதவினுர்.

1912-ஆம் ஆண்டில் சாஸ்திரியார் சென்னை மாநில அரசாங்கக் கல்லூரியில் ஸம்ஸ்க்ருதப் பேராசிரியராக நியமிக்கப்பட்டார். பண்டை முறைப்படி சிரோமணி படிப்புத் திட்டத்தைச் சென்னை ஸர்வகலாசாலையில் அமைப்பதில் நற்பங்கு கொண்டார். அக்காலத்தில் அப்பல்கலைக் கழகத்தில், 'நியாய வைசேஷிகம்' பற்றி இருபது சொற்பொழிவுகளாற்றினுர். 1914-ஆம் ஆண்டில் சென்னை மாநிலக் கல்லூரியின் நிரந்தர ஸம்ஸ்க்ருத, பன்மொழித் தொடர்புப் பேராசிரியரானுர். இப்பதவியுடன் சென்னை ஏட்டுச்சுவடி நூல்நிலையத்தின் முக்ய அதிகாரிப் பதவியையும் அணிசெய்து வந்தார். அடுத்த ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஸெனெட் ஸபையின் அங்கத்தினரானுர். 1918-ஆம் ஆண்டில் அப்பல்கலைக்கழகத்தின் ஸம்ஸ்க்ருத பாடத் திட்டக் குழுவின் அக்ராஸனராக நியமிக்கப்பட்டார். அடுத்த ஆண்டில் அரசாங்கக் கல்வி இலாகாவில், ஐ. இ. எஸ். (Indian Educational Service) என்ற உயர்தர அலுவலர் பதவிக்கு உயர்த்தப்பட்டார்.

1919-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல்வாரத்தில் மூன்றுநாட்கள் பூனு நகரில் நடந்த கீழ்த்திசைக் கல்வி

மகாநாட்டின் (Oriental Conference), ஸம்ஸ்க்ருத-நவீன நாட்டுமொழிப் பகுதியின் கூட்டத்திற்குத் தலைமை தாங்கினார். 1921-ஆம் ஆண்டில் பேராசிரியர் ரங்காசார்யா என்பாருடன் சேர்ந்து 'பத்யசூடாமணி' என்ற ஏட்டுப்பிரதி நூலைத் தொகுத்து அச்சிட உதவினார். அடுத்த ஆண்டில் கல்கத்தா நகரில் நடந்த இரண்டாம் கீழ்த்திசைக் கல்வி மாநாட்டில் தத்வப் பகுதியின் கூட்டங்களுக்குத் தலைமை தாங்கினார். 1923-ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழகத்தின் அகெடமிக் கௌன்சில் அங்கத்தினரானார். 1925-ஆம் ஆண்டில் சென்னையில் நடந்த கீழ்த்திசைக் கல்வி மாநாட்டின் வெற்றிக்குப் பெரிதும் காரணமாக இருந்தார். பின்னர் ஓராண்டுகாலம் சிரமம் எடுத்துக்கொண்டு சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'ஓரியண்டல் ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட்' என்ற கழகத்தை நிறுவுவதில் ஸேவை புரிந்தார். 1926-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் கல்கத்தாவில் நடந்த அகில இந்திய ஸம்ஸ்க்ருத மாநாட்டிலும், பிறகு நவம்பர் மாதத்தில் அலஹாபாத்தில் நடைபெற்ற அகில இந்திய ஓரியண்டல் மகாநாட்டின் தத்வப்பிரிவுக் கூட்டத்திற்கும், தலைமை தாங்கினார். இவ்வாண்டிலேயே 'சென்னை ஸம்ஸ்க்ருத அகடெமி' என்ற ஸ்தாபனத்தை உருவாக்குவதில் ஈடுபட்டு, அதன் முதல் தலைவருமானார். இதே ஸமயத்தில் பாரத தர்ம மஹா மண்டல ஸ்தாபனத்தார் குப்புஸ்வாமி சாஸ்திரிகளுக்கு '**வித்யாவாசஸ்பதி**' என்ற சிறந்த பிருதை வழங்கியது. அடுத்த ஆண்டில்தான் (1927) சாஸ்திரியாருக்கு இந்திய அரசாங்கம் '**மஹாமஹோபாத்யாய**' என்ற பட்டத்தை வழங்கி கௌரவித்தது.

அவ்வாண்டிலேயே குப்புஸ்வாமி சாஸ்திரிகள், ஸர். பி. எஸ். சிவஸ்வாமி அய்யர், கே. பாலஸுப்ரஹ்மண்ய அய்யர் ஆகியோருடன் சேர்ந்து, 'கீழ்த்திசை ஆராய்ச்சி சஞ்சிகை' (Journal of Oriental Research) என்ற இதழை ஆரம்பித்தார். 1929-ஆம் ஆண்டில் ந்யாய சாஸ்திரத்தைப்பற்றி சென்னைப் பல்கலைக் கழகத்தில் சில சொற்பொழிவுகளை ஆற்றினார். 1932-ஆம் ஆண்டில் சென்னை

நகரில் ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் முகாம் செய்திருந்த காலத்தில் குப்புஸ்வாமி சாஸ்திரிகளுக்கு '**தர்சன கலாநிதி**' என்ற பிருதை அனுக்ர ஹித்தார்கள். அடுத்த ஆண்டில ஜகந்நாதபுரி ஸ்ரீ சங்கரா சார்யஸ்வாமிகள் '**குலபதி**' என்ற பிருதை சாஸ்திரியாருக்கு வழங்கினர். 1934-ஆம் ஆண்டில் பத்தாவது அகில இந்திய தத்வமஹாநாட்டின், இந்தியத் தத்துவப் பிரிவுக் கூட்டத் திற்குச் சாஸ்திரியார் தலைமை வஹித்தார். 1935-ஆம் ஆண்டில் சாஸ்திரியார் சென்னை மாகாண அரசுக் கல்லூரி யிலிருந்து ஓய்வு பெற்றார்.

ஓய்வு பெற்ற சாஸ்திரியார் பல அரிய நூல்களை வெளி யிடுவதில் தன் காலத்தைச் செலவிடலானர். சென்னை பல் கலைக் கழகத்தின் ஆதரவில் ஸம்ஸ்க்ருத நூல்களைப்பற்றித் தெரிந்துகொள்வதற்கான தொகுப்பு (**Catalogus Catalogorum**) என்ற மாபெரும் தொகுப்புப்பணியின் தலைமை ஆசிரியப்பதவியை ஏற்றார். 1936-ஆம் ஆண்டில், சென்னை அரசு ஏட்டுச் சுவடிகள் நூல் நிலையத்திலிருந்த மண்டன மிச்ரரின் '**ப்ரஹ்மஸித்தி**' என்ற நூலை சங்கபாணி என்பா ரின் உரையுடன் தொகுத்து வெளியிட உதவினர். பிறகு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கௌரவ ஸம்ஸ்க்ருதப் பேராசிரியராகப் பதவி ஏற்றார். 1940-ஆம் வருடம் பூர்ண ஓய்வு பெற்றவராகக் குப்புஸ்வாமி சாஸ்திரியார், தமது பிறந்த ஊரான கணபதி அக்ரஹாரத்தில் வசித்து வந்தார். புத்தி கூர்மையும், கரையில்லாக் கல்வியும், அறிவும், ஆற்றலும், புகழும், குணமும், கண்யமும், ஒருங்கே படைத்த குப்புஸ்வாமி சாஸ்திரியார், 1943-ஆம் ஆண்டு ஸெப்டம்பர் மாதம் ஐந்தாம் நாள் பூத உடலை நீத்து இறைவனடி சேர்ந்தார்.



## ஸ்ரீ லக்ஷ்மண சாஸ்திரி த்ராவிட்

மேலே குறிப்பிட்டுள்ள பெயரைப் படித்தவுடன் இவர் ஒரு திராவிட தேசத்திய மஹா வித்வான் என்பது தெளிவாகும். ஆனால் இவர் பெயரளவில்தான் திராவிட நாட்டைச் சேர்ந்தவர். இவர் தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்தை யடுத்துக் கிழக்கே காவிரியின் வடபாலுள்ள, பல மஹான்களுக்கும், மஹாவித்வான்களுக்கும் நாற்றங்காலாக விளங்கிய திருவிசலூரில், சற்றேறக்குறைய சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் சிறந்து விளங்கிய ஓர் அறிஞ அந்தணர் குடும்பத்திலுதித்தவர். இவர் சிறு குழந்தையாக இருக்கும்போது இவருடைய குடும்பத்தினர் காசி க்ஷேத்திரத்திற்குச் சென்று கங்கைக்கரை வாழ்வை மேற்கொண்டு விட்டனர். லெக்ஷ்மண சாஸ்திரியாருக்கு தமிழ்மொழியே மறந்துபோய்விட்டதாம். காசியில் தக்க வித்வான்களிடம் சாத்திரபாடங்களை செவ்வனே இவர் கற்றறிந்தார்.

பிற்காலத்தில் காசியில் சிறந்த மஹாவித்வான்களில் ஒருவராக லக்ஷ்மண சாஸ்திரியார் விளங்கினர். இவருடைய காலத்தில் வாழ்ந்த வட இந்திய வித்வான்களில் சிறந்த சிலருக்கு 'லக்ஷ்மணசாஸ்திரி' என்ற பெயர் வழக்கிலிருந்தமையால் இவரை எளிதில் புரிந்து கொள்ளும் நோக்குடன் இவருடைய பெயருடன் "த்ராவிட்" என்ற அடைமொழிப் பெயர் சேர்க்கப்பட்டதாம். தர்க்கம், வேதாந்தம் முதலிய சாஸ்திரங்களில் புகழுடன் சிறந்த வித்வானக இந்நூற்றாண்டின் முதற் கால்பகுதி வரை திகழ்ந்தார் லக்ஷ்மண சாஸ்திரியார்.

இவர் வர்ணாச்ரம ஸ்வராஜ்ய ஸங்கத்தை நிறுவியவர்களுள் முதன்மையானவர். தர்ம சாஸ்திர முறைப்படி இவர் வாழ்க்கையை நடத்திவந்தார். கல்கத்தா நகரத்தினருகே

யுள்ள ஸ்ரீ தாரகேச்வரர் கோயில் தொடர்புள்ள வழக்கொன்றில் இவர் அளித்த சாக்ஷியத்துக்கு மிகுந்த மதிப்பளிக்கப் பட்டதாம். இவர் தமது மூதாதையர் வாழ்ந்த கிராமத்திற்கும், மூதாதையரின் வழிபாட்டிற்குரிய ஆசார்ய பீடம் ஆகியவற்றிடமும் மிகுந்த அபிமானமும், பக்தியும் வைத்திருந்ததாகத் தெரிகிறது. இவருக்கு இந்திய அரசாங்கம் 'மஹாமஹோபாத்யாய' பிருதை அளித்துக் கௌரவித்தது. ஆனால் பிரிட்டிஷ் இந்திய அரசு ஹிந்துக்களின் மதாசார விஷயங்களில் சட்டபூர்வமாகத் தலையிடுவதை ஆக்ஷேபித்து இவரும், இவரைப்போலவே புகழ்வாய்ந்த வங்காளத்தைச் சேர்ந்த காலஞ்சென்ற ஸ்ரீ பஞ்சானன தர்கரத்ன பட்டாசார்யரும் தங்கள் 'மஹாமஹோபாத்யாய' பட்டத்தைத் துறந்து அரசாங்கத்திற்குத் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தனர்.

இவர் காசி மஹாராஜாவினால் பெரிதும் போற்றப் பட்டார். மேலும் காசி நகரமக்களும், வித்வான்களும் இவரிடம் பெரும் மதிப்பும் பக்தியும் கொண்டிருந்தனர். இவருடைய காலத்திற்குப்பிறகு, சிறந்த வித்வானாகவும், ஆசார சீலராகவும், காசி ஸாங்க வேத வித்யாலயத்தின் அத்யக்ஷராகவுமிருந்து, காசிராஜாவின் நன்மதிப்புக்கும், காசி நகர வாஸிகளின் போற்றுதலுக்கும் இலக்காக இருந்து, அண்மையில் (மார்ச். 1977) காலமான பண்டிதராஜ ராஜேச்வர சாஸ்திரிகள் என்பார், திராவிட லக்ஷ்மண சாஸ்திரிகளின் புதல்வராவார்.



# பெருக்வாழ்ந்தான் ஸ்ரீ ரங்காசார்யார்

**த**ஞ்சாவூர் ஜில்லாவின் தென்கிழக்குப் பகுதியில் மன்னார்குடியருகே பெருகவாழ்ந்தான் என்ற கிராமத்தில் இன்றும் வேத பாடசாலை ஒன்று நெடும்பலம் பெரு நிலக் கிழார்களின் குடும்பத்தினரால் நடத்தப்பட்டு வருகின்றது. இவ்வூரில் சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் வேதம், சாஸ்த்ரம் ஆகியவற்றில் சிறந்த அறிவுடைய வைணவக் குடும்பத்தைச் சேர்ந்த கிருஷ்ணமாசார்யர் என்ற ஒரு வைணவப் பெரியார் வாழ்ந்து வந்தார். இவர் மன்னார்குடி ஸ்ரீ ராஜு சாஸ்திரிகளின் ஸமகாலத்தியவர். இவர் தமது இளமையிலேயே மன்னார்குடிச் சென்று ஆங்கு வசித்து வந்தார். இவர் வேதம் ஓதிய, சாஸ்த்ரம் பயின்ற அறிஞர். இவருக்கு 1833-ஆம் ஆண்டு, அக்டோபர் திங்கள், ஆரும் நாள், பிறந்த மகனே ரங்காசார்யார். இளமையிலேயே ரங்கசார்யார் தமது தகப்பனாரிடமே கற்று, காவ்யம், அலங்காரம், வ்யாகர்ணம் முதலியவற்றில் தேர்ச்சியடைந்தார். தகப்பனாரும், தனயனும் அடிக்கடி புதுக்கோட்டை ஸமஸ்தானத்திற்குச் சென்று ஸபைகளில் பங்குகொண்டு வருவர்.

அக்காலத்திலேயே ஸம்ஸ்க்ருத அறிஞர்களுக்கான மதிப்பு தமிழகத்தில் குன்றி வருகிறதை உணர்ந்த, கிருஷ்ணமாசார்யர், மைஸூர் ஸமஸ்தான அரசர் ஸம்ஸ்க்ருத வித்வான்களை ஆதரிப்பதில் ஈடுபாடுள்ளவர்களாக இருப்பதைக் கேள்வியுற்று, குடும்பத்துடன் மைஸூர் சென்று வாழலாமெனத் தீர்மானித்தார். அத்தருணத்தில் கும்பகோணத்தில் செல்வந்தராகவும், தர்மசிந்தனையுள்ளவராகவும் விளங்கிய ஸ்ரீ கிருஷ்ணராவ் என்பார், கும்பகோணத்திற்கு வந்துவிடும்படி, ஸ்ரீ கிருஷ்ணமாசார்யாருக்கு ஆலோசனை கூறினர். அதற்கேற்ப கிருஷ்ணமாசார்யாரும், குடும்பத்துடன் கும்பகோணத்தில் குடியேறினர். அக்காலத்தில்

கும்பகோணத்தைச் சேர்ந்த திவான் ராய ராய வெங்கட் ராவ், வெங்கட்ராவ் அக்ரஹாரம் என்ற ஒரு சிறு தெருவை உருவாக்கி, அதில் ஒரு வீட்டை கிருஷ்ணமாசார்யாருக்குத் தானம் செய்தார். மற்றும் ஸ்ரீ வ்யாஸராவ் என்பார் இவரது குடும்பத்திற்குத் தேவையான நெல்லைக் கொடுத்துவர ஏற் பாடு செய்தார்.

தமது தந்தையிடமே ரங்காசார்யார் வேதத்தையும், தர்க்கம், வைணவ வேதாந்தம் ஆகியவற்றை முற்றிலும் கற் றறிந்தார். பின்னர் தம்முடைய முயற்சியினலேயே வ்யா கர்ணம், ஜோதிஷம், கணிதம் ஆகிய சாஸ்த்ரங்களில் இவர் நல்ல அறிவுபெற்ருர். தந்தையின் மறைவுக்குப்பின், ரங்கா சார்யார் கும்பகோணத்திலுள்ள அரசினர் கல்லூரியில், ஸம்ஸ்க்ருத ஆசிரியராக நியமனம் பெற்ருர். அக்கல்லூரி யில் பல ஆண்டுகள் பணியாற்றினர். இவருக்கு இந்திய அரசாங்கம் மஹாமஹோபாத்யாய என்ற பிருதை வழங் கியது. கும்பகோணம் கல்லூரியின் முதல்வர்களாகத் திகழ்ந்த கோபால்ராவ், ஸாது சேஷய்யா ஆகியோர் இவ ரிடம் மிகுதியான மதிப்பும், கௌரவமும் வைத்திருந்தனராம். பின்னர் வந்த ஆங்கிலேய முதல்வரொருவர் புகை பிடிக்கும் பழக்கமுடையவர். ஒரு நாள் ரங்காசார்யார் வகுப்பில் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக்கொண்டிருக்கும்போது, வகுப்பறைக்கு மேலுள்ள தமது அலுவலறையில் கல்லூரி முதல்வர் புகைபிடித்துக்கொண்டிருந்தாராம். புகைச் சுருள் கள் கீழேயுள்ள ஸம்ஸ்க்ருத வகுப்பறையில் புகவே, அதை ஸ்வாசிக்க வெறுப்புக்கொண்ட ரங்காசார்யார் மாணவர்களை அனுப்பிவிட்டு, தாமும் அறையை விட்டு வெளியேறி விட்டார். வகுப்பு முடிவுற வேண்டிய குறிப்பிட்ட நேரத் திற்கு முன்னரே மாணவர் வெளிச்செல்வதைப் பார்த்த ஆங்கிலேய முதல்வர், ஒரு மாணவனைக் கூப்பிட்டு ஆசிரியர் காலவரம்பிற்கு முன்னரே, பாடத்தை நிறுத்தி மாணவர் களை அனுப்பிவிட்டதின் காரணம் யாதென வினவினர். மாணக்கன், முதல்வர் புகைத்துக்கொண்டிருந்த சுருட்டுப் புகையின் மணத்தை ஸஹிக்கமுடியாது ஸம்ஸ்க்ருத ஆசிரியர்

வகுப்பை முடித்து, வெளியேறியதாக உள்ளது உள்ளபடியே பகன்ருனும். முதல்வர் ரங்காசார்யாரைக் கண்டு தமது தவறுக்கு மன்னிப்புக்கேட்டு, அன்று முதல் புகைப்பிடிக்க வேண்டும்போது வெளியே சென்றுவிடுவாராம்.

கல்லூரியிலிருந்து ஓய்வு பெற்றபின் ரங்காசார்யார் கும்பகோணம் வெங்கட்ராவ் அக்ரஹாரத்திலேயே வசித்து வந்தார். ஆசாரசீலராகவும், அறிவுக்களஞ்சியமாகவும் திகழ்ந்த ரங்காசார்யார் 1917-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 28-ஆம் நாள் விண்ணுலகிற்கேகினர். கும்பகோணம் அரசினர் கல்லூரியில் இவருக்குப் பின்னர், ஸம்ஸ்க்ருத ஆசிரியராகப் பணியாற்றியவரே மஹாமஹோபாத்யாய R. V. கிருஷ்ணமாசார்யாராவார்.



## ஸ்ரீ காபே ராமசந்த்ராசார்

காவிரியின் கழிமுகப்ரதேசத்தில், தஞ்சை ஜில்லாவில், காசி எனும் புனிதப்பதிக்குச் சமமானதாகக் கருதப்படுவதும், சைவர்களாலும் வைணவர்களாலும், போற்றப்படுவதுமான சிறந்த புனிதத்தலம் கும்பகோணமென்ற சிறு நகரமாகும். இவ்வூரில் காவிரி நதியின் தென்பால், நதிக்கு மிக அருகில் அமைந்துள்ள காமாக்ஷி ஜோஸ்யர் தெரு என்று பெயருள்ள நீண்ட தெருவின் மேற்குக் கோடியில் தெற்கு வடக்காக ஒரு சிறு தெரு பிரிந்து செல்கின்றது. இதற்கு வெங்கட்ராயர் அக்ரஹாரமெனப் பெயர். பல்லாண்டுகளுக்கு முன்னர் இவ்வூரைச் சேர்ந்த ராய ராய வெங்கட்ராவ் என்பவர் கேரளத்தில் கொல்லம் என்ற சிறு ஸமஸ்தானத்தின் திவானுக இருந்து ஓய்வு பெற்றபின், இந்தச் சிறு தெருவை அமைத்து, அதில் ஒரு சிறு கோயிலேக் கட்டச்செய்து, அதில் பகவான் ஸ்ரீ வாஸுதேவனின் மூர்த்தத்தைப் பிரதிஷ்டை செய்வித்து, மற்றும் பன்னிரண்டு வீடுகளேக் கட்டுவித்து, அவைகளேக் கற்றறிந்த அந்தணர்களுக்குத் தானம் செய்ததுடன், அந்த வித்வான்களுக்கும் அவர்களது வழி, வழித் தோன்றியவர்களுக்கும், ஆண்டுதோறும் இரண்டு வண்டிகள் நெல் கிடைக்கும்படியான நிரந்தரமான தர்மத்தைச் செய்து புகழும், புண்யமும் பெற்றுச் சென்ருர். அப்படித் தானம் செய்யப்பட்ட வீடுகளில் பத்து வீடுகள் மத்வ மதத்தினரான வித்வான்களுக்கும், ஒரு வீடு ஒரு அத்வைத வித்வானுக்கும், ஒன்று ஒரு விசிஷ்டாத்வைத வித்வானுக்கும் தானமாக வழங்கப்பட்டனவாம். அந்த வித்வான்களின் ஸந்ததியார்களே இன்றும் அந்த வீடுகளில் வசித்து வருகின்றனர்.

இப்படி வெங்கட்ராவ் தானம் செய்த வீடுகளேப்பெற்ற மத்வஸம்ப்ரதாய வித்வான்களில் ஒருவரின் வம்சத்தில்

1866-ஆம் ஆண்டில் பிறந்தவரே காபே ராமசந்த்ராசார். 'காபே'* என்பது இவருடைய குலப்பெயர். இளமையிலேயே இவர் ஸம்ஸ்க்ருத மொழியைத் தக்க ஆசிரியர்களிடம் கற்றறிய முற்பட்டார். இவருடைய மனம் புராணங்களைப் படித்து அவைகளின் பொருளை நன்கு அறிந்து, பிறருக்கும் அவ்வறிவு பயன்தரும்படி செய்யவேண்டுமென்ற எண்ணத்தில் இளம்பிராயத்திலேயே தோய்ந்திருந்ததாக இவரையறிந்த பெரியோர்கள் கூறுவர். முப்பதாம் பிராயத்திலேயே, ஸ்ரீமத் பாகவதம், மஹாபாரதம், மத்வர் இயற்றியுள்ள மஹாபாரத தாத்பர்யநிர்ணயம் ஆகியவற்றில் முழுமையான தெளிந்த அறிவு பெற்று, புராண ப்ரவசனத்தையே தன் முக்கியக் குறிக்கோளாகக் கொண்டவர் ராமசந்த்ராசார். முதலில் கும்பகோண நகரத்திலேயே இவர் புராணப் பிரவசனங்களை நடத்திவந்தார். பின்னர் பிற ஊர்களிலும் கதாகாலக்ஷேபம் செய்து புகழடைந்தார். இவருடைய பாகவத, பாரதச் சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த பலருள், அத்வைத, விசிஷ்டாத்வைத வித்வான்கள் சிலர் முதல், படித்தவர், படிக்காத பாமரர், உத்யோகஸ்தர்கள் போன்ற பலதரப்பட்ட மக்களுமுண்டு. இவருக்கு சாரீர நயத்துடன் காம்பீர்யமுமிருந்தமையால், மைக் முதலிய நவீன ஸாதனங்கள் வழக்கிலில்லாத அக்காலத்தில் கூட இவருடைய கதா ப்ரவசனங்களை ஆயிரக்கணக்கான மக்கள் கேட்டு மகிழ்ச்சியுற முடிந்தது. கும்பகோண நகரத்தின் பல பகுதிகளிலும், பிற நகரங்களிலும் இவருடைய பாகவத, பாரத ப்ரவசனங்கள் பன்முறைகள் நடந்தனவாம். பாகவத ச்லோகங்கள் அநேகமாக முழுவதையும் புத்தகத்தின் உதவியின்றிச் சொல்லக்கூடிய ஞாபகசக்தி இவருக்குண்டு.

இவருடைய பிற்காலப் ப்ரவசனங்களில் ஒன்று கும்பகோண நகர வாஸிகளால் மிகவும் சிறந்ததாகக் கருதப்படுகின்றது. ஒரு ஸமயம் திருக்குடந்தை ஸ்ரீசக்ரபாணி ஸ்வாமி கோயிலில் ராமசந்த்ராசார் தொடர்ந்து பலதினங்கள் பாகவத

---

* 'காபேயும்' என்றும் கூறுவதுண்டெனத் தெரிகிறது.

புராண சொற்பொழிவுகளை நடத்தி வந்தார். ஒருநாள் ப்ரவசனம் நடந்து கொண்டிருந்தபோது, எங்கிருந்தோ பறந்து வந்த ஒரு கிளி, ராமசந்த்ராசாரின் தொடையில் சிறிது நேரம் உட்கார்ந்திருந்துவிட்டுப் பறந்து சென்றதாம். இச்சம்பவத்தை நேரில் கண்ட சிலர் இதுபற்றித் தெரிவித்த தாலேயே இது இங்கு இடம்பெறுகிறது. இக்காட்சியைக் கண்ட பலர், பாகவதத்தை ஏழு தினங்களில் பரீக்ஷித் மன்ன ருக்கு உபதேசித்த சுகமாமுனிவரே ராமசந்த்ராசாரின் பாக வதச் சொற்பொழிவைக் கேட்க வந்ததாக எண்ணி மகிழ்ச்சி யும் வியப்புமெய்தினராம். ராமசந்த்ராசார் புராணக் கதைகளை எடுத்து மக்களுக்குக் கூறும் முறை சாஸ்த்ரீயமா கவும், காலத்திற்கேற்ற நகைச்சுவையுடன் கூடியதாகவும், மக்களின் மனதைக் கவர்வதாகவும் இருக்குமாம்.

இவருக்கு அறுபது பிராயம் முடிந்த பின்னர், பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தாரால் 'மஹா மஹோபாத்யாய' பிருது அளிக்கப்பட்டது. ராமசந்த்ராசார், பெரும்புகழும், நீண்ட ஆயுளும் பெற்று கும்பகோணத்திலேயே வாழ்ந்து வந்தார். இவர் 1946-ஆம் ஆண்டில் விண்ணுலகேகினார். இவருக்கு இரண்டு புதல்வரும் ஒரு புதல்வியுமுண்டு. புதல் வரில் மூத்தவர் சிறந்த தத்வ சாஸ்திர மேதையும், பேரா சிரியரும், எழுத்தாளருமாகத் திகழ்ந்த காலஞ்சென்ற டாக் டர் R. நாகராஜ சர்மா. இவர் பல்லாண்டுகள் கும்பகோணம் அரசினர் கல்லூரியிலும், சென்னை பிரஸிடென்ஸி கல்லூரி யிலும் தத்துவப் பேராசிரியராகப்பணியாற்றியுள்ளார். மத்வ ஸித்தாந்த தத்வசாஸ்திரத்தில் மிகச் தேர்ச்சி பெற்றவர். இளைய புதல்வர் காலஞ்சென்ற சுதர்சனசர்மா, சிரோமணி படித்து, கும்பகோணம் நகரில் ராஜா பாடசாலையில் பல் லாண்டுகள் தலைமையாசிரியராகத் திகழ்ந்து, பல ஸம்ஸ்க்ருத நூல்களையும் இயற்றிப் புகழ் பெற்றார்.

---

# பழமார்னேரி ஸ்ரீ ஸுந்தர சாஸ்திரிகள்

பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் தஞ்சாவூர் ஜில்லாவில் திருக்காட்டுப்பள்ளியருகே பழமார்நேரி என்ற கிராமத்தில் பிறந்தவர் ஸுந்தர சாஸ்திரி. இவரது தந்தை மஹாலிங்க சாஸ்திரி, தாயார் லக்ஷ்மி அம்மாள். இவர் இளமையில் தம் ஊரிலேயே காவ்ய நாடகங்களைப் படித்துப் பின்னர் மன்னர்குடிக்குச் சென்று, அவ்வூரிலேயே தங்கி, மஹாவித்வான் ஸ்ரீ ராஜு சாஸ்திரிகளவர்களிடம் தர்க்கம்,வ்யாகர்ணம்,பூர்வோத்தர மீமாம்ஸா சாஸ்த்ரங்களை நன்குகற்றுர். சுமார் பத்தாண்டுகளுக்கு மேல் ஸுந்தர சாஸ்திரிகள் மன்னர்குடி சாஸ்திரிகளவர்களிடம் வித்யாப்யாஸம் செய்ததாகச் சொல்லப்படுகிறது. அக்காலத்தில் ஒரு ஸமயம் மைஸூர் மஹாராஜா ஸ்ரீ ராஜு சாஸ்திரிகளவர்களை மைஸூருக்கு விஜயம் செய்ய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்தார். சாஸ்திரிகள் தாம் செல்லாமல், தமது சீடர் ஸுந்தர சாஸ்திரிகளை மஹாராஜாவிற்குச் சிபார்சு செய்து மைஸூருக்கு அனுப்புவித்தார்கள்.

ஆசானின் கட்டளைப்படி ஸுந்தர சாஸ்திரிகள் மைஸூருக்குச் சென்றுர். அங்கு ராஜாங்க ஸம்ஸ்க்ருத கலாசாலையில் முக்ய ஆசிரியராகச் சில ஆண்டுகள் பணியாற்றினுர். பின்னர் மைஸூர் ஸமஸ்தானத்தின் ஆஸ்தான வித்வானுகவும் திகழ்ந்தார். இவருக்கு இந்திய அரசாங்கத்தால் மஹா மஹோபாத்யாய பிருது அளிக்கப்பட்டது. இவர் மைஸூர் நகரத்தில் பல்லாண்டுகள் வஸித்து வந்ததாகவும், பூர்வமீமாம்ஸ உத்தரமீமாம்ஸ சாஸ்த்ரங்களில் சிறந்த அறிவுடையவர் என்றும், கூர்மையான புத்தியுடையவர் என்றும், ஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள் எழுதிய த்யாகராஜ விஜயத்தில் கூறப்பட்டுள்ளது.

# ஸ்ரீ சந்த்ரசேகர சாஸ்திரிகள்

தாம்ரபர்ணீ நதியினால் செழிப்படையும் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த கல்லிடைக்குறிச்சி எனும் கிராமத்தில், சிறந்த வித்வானாக விளங்கிய ஸ்ரீ ராமா சாஸ்திரிகளின் கடைசிப் புதல்வர் சந்த்ரசேகர சாஸ்திரிகள். சிறந்த ஆஹிதாக்னிகளின் மரபில் தோன்றி, தானும் நித்யாக்னிஹோத்ரியாக விளங்கியதாலும், இவர் 'சந்த்ர சேகர தீக்ஷிதர்' என்றும் அழைக்கப்பட்டார். இவர் 1846-ஆம் ஆண்டில் பிறந்தார். இவருடைய இரண்டு அண்ணன்மார்களுள், மூத்தவரான ஸ்ரீ சாமி சாஸ்திரிகள், வாராணஸியில் (காசியில்), மேதைகளான ஸ்ரீ சிவகுமார சாஸ்திரி, ஸ்ரீ சீதாராம சாஸ்திரிகள் போன்றவர்களின் ஸமகாலத்தவர், அப்புனிதத்தலத்திலேயே வாழ்ந்து வந்தார். அடுத்த அண்ணன் ஸ்ரீ ராமஸுப்பா சாஸ்திரி சிறந்த சாஸ்த்ர அறிவு பெற்று, கல்லிடைக்குறிச்சியில் தனது தகப்பனாரைப் போலவே பல சீடர்களுக்குப் பல சாஸ்த்ரங்களில் பாடங்களைக் கற்பித்து வந்தார். சந்த்ரசேகர சாஸ்திரிகள் தமது தந்தையிடமே, பல மாணவர்களுடன்



சாஸ்த்ராப்யாஸம் செய்து வந்தார். முக்யமாக ந்யாயம், வேதாந்தம் ஆகியவற்றில் புலமைப் பெற்ருர். ஸம்ஸ்க்ருதப் படிப்புடன் ஆங்கிலமும் தனியாகக் கற்றுவந்தார். அம் மொழியிலும் இவருக்குத் திறன் ஏற்பட்டது.

படிப்பு முடிந்தபின் மதுரையில் உள்ள மதுரைக் கல்லூரி யில் ஸம்ஸ்க்ருத ஆசிரியராக முதலில் பணிபுரிந்து வந்தார். சில ஆண்டுகளில் இவருடைய அறிவும் ஆற்றலும் மதுரையிலுள்ள பல கனவான்களைக் கவர்ந்தது. அவர்களுள் ஒருவர் நீதிபதி ஸர். ஸுப்ரஹ்மண்யய்யரா வார். அவர் சென்னையில் புதியதாக ஒரு ஸ்ம்க்ருதக் கல்லூரியை நிறுவ முயற்சித்த ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி யய்யருக்கு சந்த்ரசேகர சாஸ்திரிகளின் கல்வி போதிக்கும் திறமையை விளக்கிக் கூறினர். மற்றும் ஸ்ரீ வி. கிருஷ்ண ஸ்வாமி அய்யரின் தமையனரும் சாஸ்திரிகளைப்பற்றி தம்பியிடம் சொன்ஞராம். இதற்குள் சந்த்ரசேகர சாஸ்திரி கள் மதுரையை விட்டு சிதம்பரம் சென்று அங்குள்ள ஸம்ஸ்க்ருத பாடசாலையில் ஆசிரியரானர். 1906-ஆம் ஆண்டு பிப்ரவரி முதல் நாளன்று மைலாப்பூர் ஸமஸ்க்ருதக் கல்லூரியில் பாடங்கள் கற்பிக்கத் துவங்கப்பட்டது. தலைவர் ஸ்ரீ குப்புஸ்வாமி சாஸ்திரிகளையடுத்து, முக்ய ஆசிரியராக சந்த்ரசேகர சாஸ்திரிகள் நியமிக்கப்பட்டார். குப்புஸ்வாமி சாஸ்திரிகளுக்குப் பின்னர் 1911-ஆம் ஆண் டின் ஆரம்பத்தில் சந்த்ரசேகர சாஸ்திரிகள் கல்லூரியின் தலைவர் பதவியை ஏற்ருர். கல்லூரித் தலைவராக இருந்த போது, சென்னைப் பல்கலைக்கழகத்தில் சிரோமணி வகுப்பு பரீக்ஷாதிகாரியாகவும், ஸம்ஸ்க்ருத எம். ஏ. பட்டப் படிப்புப் பகுதியின் பரீக்ஷாதிகாரியாகவும் இருந்துவந்தார்.

சந்த்ரசேகர சாஸ்திரிகள் கல்லூரியிலிருந்த காலத்தில் அவரிடம் படித்த மாணவர்களுள் முக்யமானவர்கள், நூரணி அநந்தகிருஷ்ண சாஸ்திரிகள் (பின்னர் மஹா மஹோபாத்யாய பட்டம் பெற்றவர்), பத்மநாப சாஸ்திரி கள், பக்ஷிதீர்த்தம் டி. வி. ராமசந்த்ர தீக்ஷிதர்,

வெங்கடேச தீக்ஷிதர், ஸூர்யநாராயண சாஸ்திரி, ஸ்ரீவத்ஸவ ஸோமதேவ சர்மா முதலியோராவர்.

சந்த்ரசேகர சாஸ்திரிகளுக்கு இந்திய அரசாங்கம் மஹாமஹோபாத்யாய பிருதை அளித்தது. 1918-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் பத்தாம் நாள் சாஸ்திரியார் சென்னையில் சிவபதமடைந்தார். தமையன்மார் இருவரையும்போல் இறுதிக்காலத்தில் துறவறம் பூணவேண்டுமென்ற இவரது அவா நிறைவேருது போயிற்று. எல்லா சாஸ்திரங்களிலும் தெளிவான, முழுமையான அறிவும், கண்யமும், ஒழுக்கமும், திறமையும் ஒருங்கே நன்கு அமையப் பெற்றும், தன் மரணகாலம் வரை ஆசாரசீலராகவும், நித்யாக்னிஹோத்ரியாவும் திகழ்ந்தார் சந்த்ரசேகர சாஸ்திரிகள்.



# ஸ்ரீ லக்ஷ்மண ஸூரி

தமிழகத்தில் திருநெல்வேலி மாவட்டத்தில் புனல் வேலி என்ற சிற்றூரில் முத்து ஸுப்பய்யர் என்ற ஒருவர் இருந்தார். இவர் ஸம்ஸ்க்ருத மொழியிலும் தமிழ்மொழி யிலும் சிறந்த புலவரும் கவியுமாவார். 'இவர் முத்துஸுப்ப கவி' என்றும் கூறப்படுவார். வ்யாகர்ணத்திலும், வேதாந் தத்திலும் நல்ல அறிவு பெற்றவர். இவர் தொகுத்த 'ஸம்க்ஷிப்த ராமாயணம்' என்ற நூல் பின்னர் இவருடைய குமாரர் லக்ஷ்மண ஸூரியினுல் பிரசுரிக்கப்பட்டது. மற்றும் தமது ஆயுள்காலத்திலேயே வேதாந்த நாடகம், வேதாந்த கீர்த்த னம் போன்ற நூல்களேயும் இயற்றிப் பிரசுரித்துள்ளார் முத்து ஸுப்பையர். இவருக்கு 1859-ஆம் ஆண்டில் ஆகஸ்டு மாதத்தில் பிறந்த மகனே லக்ஷ்மண ஸூரி. இளமையில் தம் தகப்பஞரிடமே அடிப்படை அறிவைப் பெற்ருர் லக்ஷ்மண ஸூரி. பின்னர் கடயம் கிராமத்தில் வஸித்துவந்த ஸுப்பா தீக்ஷிதர் என்ற வித்வானிடம் கல்வி பயின்ருர்.

பிறகு 1896-ஆம் ஆண்டில் லக்ஷ்மண ஸூரி தஞ்சா வூரில் இருந்த அர்ச் பீடர் கல்லூரியில் (St. Peter's College) ஸம்ஸ்க்ருத ஆசிரியராக நியமனம் பெற்ருர். 1907-ஆம் ஆண்டுவரை அக்கல்லூரியில் பணியாற்றினுர். அக்கல்லூரி யில் கல்லூரி வகுப்புகள் மூடப்பட்டபொழுது, இவர்சென்னே சென்று அங்குள்ள பச்சையப்பன் உயர்நிலேப்பள்ளியில் ஆசிரி யராகப் பணியேற்ருர். தஞ்சையில் இவரிடம் படித்த மாண வர்களுள் பின்னர் சென்னே மாகாண அரசினர் கல்லூரியில் (Presidency College) ஸம்ஸ்க்ருதப் பேராசிரியராகத் திகழ்ந்த காலஞ்சென்ற மஹா மஹோபாத்யாய குப்புஸ்வாமி சாஸ்திரிகள், காலஞ்சென்ற சென்னே K. பாலஸுப்ரஹ் மண்யய்யர் முதலியோர் முக்யமானவர்கள்,

தஞ்சையில் வஸிக்கும் காலத்திலேயே நூல்களைத் தொகுப்பதிலும், காவ்யங்களைப் படைப்பதிலும், உரைகள் எழுதுவதிலும் லக்ஷ்மண ஸூரியின் மனம் ஈடுபடலாயிற்று. **ஈசோபநிஷத் காரிகா** என்று, ஈசோபநிஷத்திற்கு ஓர் உரை எழுதிப் பிரசுரித்தார். **மாண்டுக்ய** உபநிஷத்திற்கும் உரை செய்து வெளியிட்டார். இந்த இரு உரைகளையும் மன்னார்குடி ஸ்ரீ ராஜு சாஸ்திரிகள் ''பகவத்பாதாளின் பாஷ்யங்களில் உபநிஷத்துகளுக்குக் காணப்படும் பொருளை அனுஸரித்து லக்ஷ்மண ஸூரியினால் இயற்றப்பட்ட காரிகைகளிலுள்ள செய்யுள்கள் தெளிவாகப் பொருள் அறிந்து கொள்ளக் கூடியதாக இருப்பதுடன், எல்லோருக்கும் உதவியளிப்பதாகவும் இருக்கின்றன'', என ஐந்து ஸம்ஸ்க்ருத ச்லோகங்களில் புகழ்ந்துள்ளார். 1903-ஆம் ஆண்டில் தஞ்சாவூருக்கு விஜயம் செய்த மைஸூர் திவான் ஸர். கே. சேஷாத்ரி அய்யர் லக்ஷ்மண ஸூரியின் உபநிஷத் காரிகைகளை வாசிக்கக் கேட்டு, மிகவும் புகழ்ந்து, இவருக்கு "**ஸூரி**" என்ற பிருதை அளித்துக் கௌரவித்தார். அது முதல்தான் லக்ஷ்மண சாஸ்திரிகள் "லக்ஷ்மண ஸூரி'' ஆனார்.

தஞ்சையில் ஆசிரியராகப் பணியாற்றும் காலத்தில் இவர் முராரியின் நாடகமான அநர்கராகவத்திற்கு **அகர** என்ற விரிவுரையையும், பவபூதி இயற்றியுள்ள உத்தரராமசரிதம், மஹாவீரசரிதம் ஆகிய இரண்டிற்கும் முறையே **ஸரளா, உஜ்வலா** என்ற இரு வ்யாக்யானங்களையும், பட்டநாராயணனின் வேணீஸம்ஹார நாடகத்திற்கு **சூடாமணி** என்ற உரையையும், ராஜசேகரரின் பாலராமாயணத்தின் முற்பகுதிக்கு **தத்வாலோகம்** என்ற உரையையும், மதனரின் **பாரிஜாதமஞ்ஜரீ** என்ற நாடகத்தின் முதல் இரண்டு அங்கங்களுக்கும் **பரிமளா** என்ற ஒரு வியாக்யானமும் எழுதியுள்ளார்.

இப்படி காவ்யங்களுக்கு இவர் எழுதிய விரிவுரைகளைப் புகழ்ந்து, ஜர்மனி நாட்டிலுள்ள ஹால் (Halle) பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் டாக்டர் ஹல்ட்ச் (Hultch) ''லக்ஷ்மணஸூரி மல்லிநாதரை ஒத்த பிற்கால விரிவுரை

யாளர். இவருடைய உரைகள் பூர்ணமாகவும், ஆழ்ந்த அறிவுடன் எழுதப்பட்டவைகளாகவும் உள்ளன'', என்று இந்தியன் ஆண்டிக்வரி (Indian Antiquary) என்ற சஞ்சிகையில் புகழஞ்ஜலி செலுத்தியுள்ளார்.

மற்றும் **பாரத ஸங்க்ரஹம், நளோபாக்யான ஸங்க்ரஹம் ராமாயண ஸங்க்ரஹம்** போன்ற நூல்களையும் இயற்றியுள்ளார் லக்ஷ்மண ஸூரி. **பீஷ்ம விஜயம்** என்பது இவருடைய முதல் உரை நடைக் கோவையாகும். இந்நூலிற்கு சென்னை (பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி) அக்கால ஆசிரியர் வேதாந்தமய்யங்காரின் குறிப்புகளும், எட்டயபுரம் அரசர் உயர்நிலைப்பள்ளி (அக்கால) தலைமை ஆசிரியர், நெல்லையப் பய்யரின் மொழிபெயர்ப்பும் அணி செய்கின்றன.

லக்ஷ்மண ஸூரி இயற்றிய காவ்யங்கள் பல. முதன் முதலில் இயற்றிய காவ்யம் **விப்ரஸந்தேசம்**, என்ற கிருஷ்ணனுக்கு ருக்மிணி ஓர் அந்தணர் மூலம் செய்தி அனுப்பிய தூத காவ்யம். **மனஸ்ஸந்தேசம்** (குருஸ்தவம்), மற்றும் ஸ்ரக்தரா விருத்தத்தில் **காயத்ரீ ராமாயணம்** என்றதும், **அக்ஷரமாலிகா ராமாயணம், வேங்கடேச ஸ்தவம், கருணகம், ப்ரபன்னவிபீஷணம், ஜார்ஜ்தேவ சதகம்** போன்றவையும் இவர் இயற்றிய சிறுகாப்பியங்களாம். மற்றும் **டில்லீ ஸாம்ராஜ்யம், பௌலஸ்த்யவதம், கோஷயாத்ரா** ஆகிய நாடக நூல்களையும் இவர் இயற்றியுள்ளார். லக்ஷ்மண ஸூரி இறுதியாக எழுதிய காவ்யம் **பகவத்பாதாப்யுதயம்** என்ற ஆதி சங்கரரின் சரித்திரத்தைச் சுருங்கச் சொல்லும் நூலாகும். மற்றும் வாமனரின் காவ்யாலங்கார ஸூத்ர விருத்தியின் ஒரு பகுதிக்கும், மம்மடரின் காவ்யப்ரகாசத்தின் பத்தாம் அத்யாயத்திற்கும், ஹர்ஷசரிதத்தின் முதல் இரண்டு உச்வாஸங்களுக்கும், திலகமஞ்ஜரியித ஒரு பகுதிக்கும் குறிப்புகள் எழுதி கல்லூரி மாணவர்களுக்குப் பெரும் உதவி செய்துள்ளார் லக்ஷ்மணஸூரி.

இந்த நூற்றாண்டின் ஆரம்ப ஆண்டுகளில் பொது வாழ்வில் சிறந்து விளங்கிய ஸர். பி, எஸ். சிவஸ்வாமி அய்யர்

வீ. கிருஷ்ணஸ்வாமி அய்யர் போன்ற பெருந்தகைகள் லக்ஷ்மண ஸூரியிடம் மிகுந்த அன்பும், மதிப்பும் வைத்திருந்தனர். இவருடைய சிறு நூல்களில் பல சென்னைப் பல்கலைகழகத்தின் பாடப்புத்தகங்களாக இடம் பெற்றன. இவர் சென்னையில் வாழ்ந்த காலத்தில்தான் இவருக்கு மஹா மஹோபாத்யாய விருது அளிக்கப்பட்டது. சென்னை மாநில அரசாங்கமும் இவருக்கு ஒரு சிறு தொகையை மான்ய மாக அளித்தது.

காவ்யம், உரைநடை, ஸ்தோத்ரம், விரிவுரை, தொகுப்பு என்ற முறைகளில் சுமார் 48 நூல்களைப்படைத்து, புகழும், அறிவும் நிறைந்து திகழ்ந்த லக்ஷ்மண ஸூரி சென்னை மாநகரத்தில் சிவபதமடைந்தார். இவர் ஸம்ஸ்க்ருத மொழியில் முக்கியமாக வ்யாகர்ணத்திலும், சொல்வளத் திலும் சிறந்து விளங்கியவர். இவருடைய உரைநடைத் தனிப்பட்ட சிறப்புடையது. இதிஹாஸ நூல்களைச் சுருக்கி அமைத்து மக்களுக்குப் பெரும் தொண்டாற்றியுள்ளார் இவர். தனிப்பட்ட வாழ்க்கையில் கண்யமாகவும், எளிமை யாகவும் திகழ்ந்தார். இவருடைய இரண்டாவது குமாரர், ஸங்கீத அறிவிலும், ஸம்ஸ்க்ருத அறிவிலும் சிறப்படைந்து, இந்தியத் தலைமை நீதித்தலத்தில் (Supreme Court) நீதி பதியாக விளங்கிய காலஞ்சென்ற T. L. வெங்கட்ராமய்யர்.



# ஸ்ரீ தேசிகாசார்யார்

கூபிஸ்தலம் என்ற பெயர் கொண்டு, கும்பகோணத்திற்கு எட்டு மைல் மேற்கில், ஒரு வைணவத்திருப்பதி உள்ளது.



அவ்வூரைச் சேர்ந்த வைணவ அந்தண அறிஞர் கோபாலாசார்யார் என்பவர் திருப்பதி க்ஷேத்ரத்தில் வஸித்துவந்தார். அவருடைய குமாரரே தேசிகாசார்யார். இவர் திருப்பதியில் பிறந்தார். சென்ற நூற்றாண்டின் மையப் பகுதியில் பிறந்திருக்க வேண்டுமென ஊஹிக்க வேண்டியிருக்கிறது. தேசிகாசார்யார் இளமையில் லாடபுரம் கோபாலார்ய மஹாதேசிகனிடத்திலும், பின்னர் கோதண்டபட்டி ஸ்மாமியிடமும் வைஷ்ணவ வேதாந்த க்ரந்தங்களைப் படித்துத் தேர்ச்சியடைந்தார். மற்றும் பிற மதத்தத்வ நூல்களையும் தானே கற்றறிந்தார். திருப்பதியிலிருந்த புரசை ரங்காசார்யாரிடம் தர்க்க சாஸ்த்ரத்தைப் பயின்றார்.

திருப்பதியில் முற்காலத்தில், திருப்பதிக்கோயில் தர்மகர்த்தாக்களாக இருந்தவர்களால் ஒரு ஸம்ஸ்க்ருதக் கல்லூரி ஏற்படுத்தப்பட்டு நடந்து வந்தது. மஹந்த் ப்ரயாகதாஸ், தேசிகாசார்யாரை அக்கல்லூரியில் முக்கிய ஆசிரியராக நியமித்தார். அங்கு ஆசிரியராக இவர் பணிபுரிந்து வந்த காலத்தில், காஞ்சீபுரத்தைச் சேர்ந்த ப்ரதிவாதி பயங்கரம்

காதீ அநந்தாசார்ய ஸ்வாமி என்பவர், 'ஜகத்குரு' என்கிற பிருதுடன் வடநாட்டு யாத்திரையை மேற்கொண்டு, காசி க்ஷேத்ரத்தை யடைந்தார். காசியில் அப்போது வாழ்ந்து வந்த மஹாவித்வான்கள் அவரிடம் சென்று, வேதாந்த வாக்யார்த்தம் சொல்லி தங்களை வாதில்வென்றாலல்லது அவர் 'ஜகத்குரு' என்ற பிருதுக்குத் தகுதியற்றவர் என்று கூறினார்களாம். அநந்தாசார்ய ஸ்வாமி அந்த இக்கட்டான நிலையில் திருப்பதி மஹந்துக்குக் கடிதம் எழுதி தேசிகாசார்யாரைக் காசிக்கு வரவழைத்தனராம். தேசிகாசார்யாரும் காசிநகரத்து வித்வான்களை எளிதில் வாதில் வென்றாராம். அநந்தாசார்யஸ்வாமி கபிஸ்தலம் தேசிகாசார்யாரை யானையின்மீது வீற்றிருக்கச் செய்து காசி மாநகரின் வீதிகளின் வழியே ஊர்வலமாக அழைத்து வரச் செய்து மரியாதை செய்தனராம்.

பின்னர் காசியிலிருந்து புகழுடன் திருப்பதி திரும்பிய தேசிகாசார்யாரை,காஞ்சீபுரத்திற்கு வரவழைத்து,அவ்வூரில் சிறந்து விளங்கிய வித்வான்களும், முக்யக் கனவான்களும், மற்றும் சென்னையைச் சேர்ந்த வி.வி. ஸ்ரீனிவாஸய்யங்கார், S. வரதாசார்யார் முதலியோரும், திருச்சிராப்பள்ளி A.V. கோபாலாசார்யாரும் சேர்ந்து, விஷ்ணுகாஞ்சியின் முக்ய வீதிகள் வழியே யானைமீது பவனி வரும்படி செய்து, இவருக்கு 'விஜயத்வஜம்' என்ற பிருதையும் வழங்கினர். இவருக்கு இந்திய ஸர்க்கார் 'மஹா மஹோபாத்யாய' பிருதை வழங்கியது. இவர் இந்நூற்றுண்டின் முற்பகுதியில் பெரும் புகழுடன் திகழ்ந்து மறைவடைந்த சிறந்த வித்வான்களில் ஒருவராவர்.

இவர் இயற்றிய நூல்களில் முக்யமானவை:—

1) வ்யாஸஸித்தாந்த மார்த்தாண்டம் 2) அதிகரணரத்னமாலா 3) கார்யாதிகரண உச்வாஸம் 4) ந்யாயஸித்தாந்த பூமிகா 5) சதகோடி கண்டனம் 6) புருஷஸூக்த பாஷ்யம் 7) ஸித்தாந்த த்ரய ஸங்க்ரஹம் இவர் ஸம்ஸ்க்ருதத்தில் பேசுவதில் வல்லுனர். இவருடைய ஸம்ஸ்க்ருதச் சொற்பொழிவுகள் ஸுலபமாகப் புரிந்து கொள்ளத்தக்கதாயும், கேட்போரின் மனதைக் கவர்வதாகவும் இருக்குமாம்.

## லக்ஷ்மீபுரம் ஸ்ரீ ஸ்ரீனிவாஸாசார்யார்

**ஸ்ரீ**னிவாஸாசார்யார் திருப்பதி நல்லான் சக்ரவர்த்தி வம்சத்தைச் சேர்ந்தவர். இளமையில் கேதாண்டபட்டியில் எழுந்தருளியிருந்த விரக்த ராகவாசார்ய ஸ்வாமியிடம் வைஷ்ணவ வேதாந்தம் படித்து, அவரிடமே பரஸமர்ப்பணம் செய்து கொண்டார். பின்னர் ஸதார்யர் என்பாரிடம், காவ்யம், நாடகங்களைக் கற்றறிந்தார். பிறகு மைஸூர் சென்று, ஆங்கு தர்க்கஸிம்ஹ கஸ்தூரி ரங்காசார்யாரிடம் பல சாஸ்திரங்களை அப்யஸித்தார். முக்யமாக மீமாம்ஸா சாஸ்திரத்தில் மிகத் தேர்ச்சியான அறிவை அடைந்தார். பின்னர் மைஸூர் அரண்மனையில் தானாதிகாரியாக நியமனம் பெற்று, கர்னாடகப் பகுதியிலேயே நிரந்தரமான வாழ்க்கையை அமைத்துக் கொண்டார்.

இவருடைய ஆராய்ச்சி மனப்பான்மை பல நூல்களின் படைப்பிற்குக் காரணமாயிற்று. 1928-ஆம் ஆண்டில் இவர் **மானமேயோதயச்லோகவார்த்திகம்** இயற்றி வெளியிட்டார். இவருடைய **தர்சநோதயம்** (1933) என்ற வைஷ்ணவ ஸித்தாந்தத்திலுள்ள பலதத்வங்களை நிரூபணம் செய்யும் நூல், காலஞ்சென்ற ஜனாதிபதி ராதாக்ருஷ்ணன் அவர்களுடைய முன்னுரையைப் பெற்றுள்ளது. மற்றும் மீமாம்ஸா சாஸ்திர வகையில் **சபரபாஷ்யபூஷணம்**, **அத்ருஷ்டபரீக்ஷா**, **ஆகமஸாரம்**, **மானமேய ரஹஸ்ய விவரணம்** ஆகியவற்றையும் இவர் இயற்றியுள்ளார். இவருடைய அறிவுச் சிறப்பை வியந்து இவருக்கு இந்திய அரசாங்கத்தால் மஹா மஹோபாத்யாய பிருது அளிக்கப்பட்டது.

---

# ஸ்ரீ R. V. க்ருஷ்ணமாசாரியார்

இவ்வித்வான் ஸம்ஸ்க்ருதப் பேராசிரியர்களில் முக்ய மான ஒருவர். கும்பகோண நகரமே இவருடைய புகழிற்கு இருப்பிடமாக விளங் கியது. தஞ்சை ஜில் லாவில், திருவையாற் றுக்குச் சுமார் ஒரு மைல் கிழக்காகவுள்ள ராயம்பேட்டை என்ற சிற்றூரில் இவர் 1878-ஆம் ஆண்டில் பிறந் தார். இவருடைய குலத்திற்கு 'சக்ர வர்த்தி' என்ற வம்சப் பெயர் உண்டு. தகப் பனார் வெங்கடேச அய்யங்கார் எனும் வைணவ அந்தணச் சீலர். தாயார் லக்ஷ்மி அம்மாள். இவர் இளமையிலிருந்தே ஸம்ஸ்க்ருத மொழி யையும் மலையாள மொழியையும் கற்ப



தில் மிகுந்த ஆர்வம்கொண்டார். இவர் ஸம்ஸ்க்ருத இலக்கியத்தின் பல பகுதிகளைப் புது அக்ரஹாரம் ஸுப்பராயசார், ஸ்ரீமுஷ்ணம் ஸுப்பராயாசார், மீமிசல் நரஸிம்மாசார், திருப்புக்குழி கோபால தாதாசாரியார் முதலிய பெரியோர்களிடம் பயின்று திறமை பெற்றார். முதன் முதலாக இவர் திருச்சி அர்ச். சூசையப்பர் கல்லூரி யில் மலையாள ஆசிரியராகப் பதவி ஏற்றார். அக்காலத்தி லேயே இவர் ஸம்ஸ்க்ருத மொழியில் நல்ல தேர்ச்சி பெற்

திருந்ததால் ஸ்ரீரங்கத்தில் உள்ள வாணீ விலாஸ அச்சகத்துடன் தொடர்பு கொண்டார். இத்தொடர்பு பல ஆண்டுகள் நீடித்தது. திருச்சியில் இருந்த காலத்தில் கோழியாலம் ஸ்வாமி என்பவரிடத்தில் வேதாந்த பாடங்களை அப்யஸித்தார். திருச்சியில் வேலை பார்த்து வந்த காலத்தில் ஒவ்வொரு வாரமும் வெள்ளிக்கிழமை மாலை புறப்பட்டுக் கும்பகோணம் வந்து இரண்டு தினங்கள் தங்கி, மீமாம்ஸா சாஸ்திரத்தைப் பயின்று திங்கள் காலை வேலைக்குத் திரும்புவார்.

இவர் ''காளிதாஸ'' என்ற ஒரு தமிழ் சஞ்சிகையை நடத்தி வந்தார். மற்றும் ஸ்ரீரங்கத்தில் ப்ரசுரிக்கப்பட்டு வந்த ''ஸஹ்ருதயா'' என்ற ஸம்ஸ்க்ருத சஞ்சிகையின் உதவி ஆசிரியராகப் பணியாற்றி யிருக்கிறார். பின்னர் 1917-ஆம் ஆண்டில் கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் ஸம்ஸ்க்ருதப் பேராசிரியராகப் பதவி ஏற்றார். பதினாறு ஆண்டு காலம் இக்கல்லூரியில் பணியாற்றிய இவரை அக்கல்லூரியின் முதல்வர்களாக இருந்த R. M. ஸ்டாதம், P. ராஜகோபாலய்யர், A. சக்ரவர்த்தி முதலியோர் பெரிதும் புகழ்ந்துள்ளனர். ஒருசமயம் பல்கலைக்கழகக்குழுவின் தலைவராக தேசீயத் தலைவர் ஸத்யமூர்த்தி அவர்கள் கல்லூரிக்கு வருகை தந்தபோது, க்ருஷ்ணமாசாரியாரின் வயதையும் கல்வித்திறமையையும் மனதில் கொண்டு, தம்மிடத்திற்கு இவரை அழைக்காது, தானே பேராசிரியரின் அறைக்குச் சென்று இவருடன் ஸம்ஸ்க்ருத கல்வியைப் பற்றிப் பல விஷயங்களை ஆராய்ந்தனராம்.

கல்லூரியில் படித்து வந்த மாணவர்களின் கல்வி மேம்பாட்டை மாத்திரம் கவனியாது, அவர்களுடைய ஒழுக்கத்தையும், கட்டுப்பாட்டையும் வளர்ப்பதிலும், மிகுந்த கண்டிப்புடன் அவர்களை நடத்துவதிலும், ஆசிரியர் ஈடுபாடுள்ளவர். பெரும்பாலும் காவ்ய பாடங்களை நடத்தும்போது புத்தகங்களை வைத்துக் கொண்டு நடத்துவது என்பது கிடையாது. ஏனெனில் பல காவ்யங்கள் இவருக்குக் கசடற மனப்பாட

மாக இருந்து வந்தன. பாடம் போதிக்கும் காலங்களில் நகைச்சுவையுடனும், பொருள் பொருத்தமாகக் கூறுவதுடனும், போதிப்பது இவருடைய பழக்கம். இவரிடம் படித்த மாணவர்கள் சிறிதும் குறைவின்றிய ஊக்கத்துடனும், கவனத்துடனும் வகுப்பறையில் இருந்து பாடம் கேட்பர். இப்படிச் சிறந்த காவ்யங்களை எளிய முறையில் மாணுக்கர்களின் மனதில் பதிய வைக்கும் ஆசிரியரின் திறமையை மாணுக்கர்களும் பாராட்டி வந்தனர். இத்தகைய நல்லாசிரியரின் கீழ் ஸம்ஸ்க்ருதம் பயிலும் வாய்ப்பு இச்சிறு நூலை இயற்றியுள்ள சிறுவனுக்கும் கிட்டியது.

இலக்கிய அறிவுடன் இசையிலும் இவருக்கு சிறந்த அறிவும், ஆற்றலும் இருந்தது. இவரே பிடில் வாசிப்பதில் தேர்ச்சி பெற்றவர். தன்னுடைய குழந்தைகள் எல்லோருக்கும் சிறந்த ஸங்கீத வித்வான்களைக் கொண்டு இசைப் பயிற்சி செய்வித்தார். எப்போதாவது ஓய்வு கிட்டும் காலங்களில் நல்ல கீர்த்தனங்களை இனிமையாகப் பாடுவார். இறப்பதற்கு முதல்நாள் கூட இனிமையாகப் பாடக் கூடியவர்களைக் கொண்டு ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ராளின் " மானஸ ஸஞ்சரரே " என்ற கீர்த்தனத்தையும், வேதாந்த தேசிகரின் ஹம்ஸ ஸந்தேசப் பாக்களையும் ராகத்துடன் பாடக் கேட்டாராம்.

புத்தகங்களைச் சேகரிப்பதிலும், பிறருக்கு அவைகளைக் கொடுத்து உதவுவதிலும் க்ருஷ்ணமாசாரியார் ஒப்பற்ற பணி செய்துள்ளார். தன் வீட்டில் ஸம்ஸ்க்ருதம், மலையாளம், தெலுங்கு. கன்னடம் முதலிய மொழிகளில் அச்சிடப்பட்ட நூல்கள், ஓலைச்சுவடிகள் எவ்வளவு கிடைத்தனவோ அவ்வளவையும் சேர்த்து, ஒரு தனி அறையில் வாசகசாலை போன்றே அமைத்து வைத்திருந்தார். புத்தகங்களே இவருடைய ஆயுட்கால நண்பர்கள். ஒரு கண் முழுவதிலும் தெரியாமல் போன பின்னும்கூட இவர் படிக்கும் வழக்கத்தை நிறுத்துவதில்லை,

ஸம்ஸ்க்ருத நாடகங்களில் தமது மாணுக்கர்களை நடிக்கும்படி செய்வதில் திறமை வாய்ந்தவர். இவரே ஒரு சமயம் சாகுந்தல நாடகத்தில் கண்வ மஹரிஷியாக நடித்தார். மற்றும் கல்லூரி ஸம்ஸ்க்ருத ஸமாஜத்தின் சார்பில் நடக்கும் கூட்டங்களில் மாணவர்களைப் பேசத் தயாரிப்பதிலும், அவர்களைக்கொண்டு கல்லூரி சஞ்சிகையில் கட்டுரைகளை எழுதவைப்பதிலும் ஊக்கம் கொண்டவர்.

நகைச்சுவையுடனும், சிலேடைகளுடனும் பேசுவதில் திறமை வாய்ந்தவர். தனக்குக் கண்பார்வை முற்றிலும் இழந்துபோன பின் ஒருசமயம் இவருடைய பழைய நண்பர்களில் ஒருவர் இவரிடம் வந்தபோது, அவருடைய குரலைக் கொண்டு யாரென்று தெரிந்துகொண்டு, '' எனக்கு இப்போது வ்யக்திவிவேகம் * இல்லை ; ஆனுல் **த்வன்யாலோகம் 1** இருக்கிறது '' என்று வேடிக்கையாகச் சொன்னுராம். இவர் சிறந்த மனிதாபிமானி. பிராணிகளைக்கூட ஹிம்ஸிப்பதை ஸஹிக்கமாட்டார். ஒரு முறை வீட்டிலிருந்து ஒரு மாட்டுவண்டியில் கல்லூரிக்கு வரும்போது வண்டி ஓட்டுபவன் தார்க்குச்சியால் வண்டி மாட்டைக் குத்தியதைப் பார்த்துச் சினம்கொண்டு வண்டியிலிருந்து குதித்துக் கல்லூரிக்கு நடந்தே சென்றுர். கடமை உணர்ச்சியிலும், ஒழுக்கத்திலும் பிறருக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தார். இதனுலேயே இவர் தமது மாணுக்கர்களிடம் கட்டுப்பாட்டையும் ஒழுக்கத்தையும் எதிர்பார்த்து வந்தார்.

க்ருஷ்ணமாசாரியாருக்கு ஸம்ஸ்க்ருத மொழியில் இருந்த ஆற்றலையும், நாவன்மையையும் பெரிதும் போற்றி கள்ளிக்கோட்டை ஜாமூதிரி இவருக்கு 1903-ஆம் ஆண்டு ' அபினவபட்ட பாண '', '' தர்க்க அலங்கார வித்யா

---

* ' வ்யக்திவிவேகம் ' (ஒரு நூலின் பெயர்) - இங்கு பொருள் =' உருவம் தெரியவில்லை ' 1 ' த்வன்யாலோகம்' (ஒரு நூலின் பெயர் - இங்கு பொருள் = ' குரலைக்கேட்டு புரிந்து கொள்ளுதல் ',

பூஷண '' என்ற பிருதுகளையும், ஒரு தங்கப் பதக்கத்தையும் அளித்தார். 1933-ஆம் ஆண்டில் கொச்சி ராஜ்யத்தின் அரசகுமாரரால் '' பண்டிதராஜ '' என்ற பிருது அளிக்கப் பட்டது இவ்வாண்டில் இவர் கல்லூரியிலிருந்து ஓய்வு பெற்ருர். இவருக்கு 1934-ஆம் ஆண்டில் இந்திய அரசாங் கத்தாரால் '' மஹா மஹோபாத்யாய '' பிருது வழங்கப் பட்டது. 1942-ஆம் ஆண்டில் ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதி பதிகளான ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளால் '' வித்வன் மணி '' என்ற பிருது அளிக்கப்பட்டது.

இப்பேராசிரியர் இயற்றிய நூல்கள் பல. அவற்றுள் **அன்யாபதேச சதகம்**, **வாணீ விலாபம்**, **ஸுபாஷித சதகம்**, **ஹர்ஷ சரித ஸங்க்ரஹம்**, **தசகுமாரசரித ஸங்க்ரஹம்**, **லகு காதம்பரீ** முதலி யவை முக்யமானவை. இவையன்றி மலையாளத்தில் **அர்ச்சாவதார வைபவம்** என்ற சிறு நூலையும், மற்றும் சுமார் பத்து தமிழ் நூல்களையும் எழுதியுள்ளார். ந்யாய, வ்யாகர்ண நூல்கள் சிலவற்றைத் தொகுத்துள்ளார். இம் மஹாவித் வான் 1943-ஆம் ஆண்டு ஸெப்டம்பர் மாதம் நான்காம் நாள் (ஸுபானு வருடம் ஆவணி மாதம் சுக்லபக்ஷ த்ரிதியை தினத்தில்) வைகுண்ட பதவி அடைந்தார்.

1949-ஆம் ஆண்டில் கும்பகோணம் அரசினர் கல்லூரி யில் பேராசிரியர் க்ருஷ்ணமாசாரியாரின் உருவப்படம், அக் காலத்திய சென்னை மாநிலக் கல்வி மந்திரி மாதவமேனன் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. அவ்விழாவிற்கு ஸ்ரீ காஞ்சீ ஆசார்யாள், இந்திய அரசாங்க நிதி மந்திரி ஸ்ரீ சிந்தாமண் தேஷ்முக் போன்ற பெரியோர்கள் அனுப்பிய செய்திகளில், க்ருஷ்ணமாசாரியாரின் சிறந்த ஸம்ஸ்க்ருத அறிவாற்றலைப் போற்றியிருந்தனர் என்பது குறிப்பிடத் தக்கது.



# ஸ்ரீ பஞ்சாபகேச சாஸ்திரிகள்

தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள பழமார்நேரி கிராமத்தில் சென்ற நூற்றுண்டின் பிற்பாதியில் உதித்தவர் பஞ்சாபகேச



சாஸ்திரி. இளம் பிராயத்தில் இவர் அவ்வூரில் சிறந்த ஸம்ஸ்க்ருத வித்வாஞக விளங்கியவரும், மன்ஞர்குடி சாஸ்திரிகளவர்களின் மாணுக்கரும், பின்னர் மஹாமஹோபாத்யாய பிருது பெற்றவருமான ஸுந்தர சாஸ்திரிகளிடம் தர்க்க சாஸ்திரமும், வேதாந்தமும் படித்தார். சென்னையில் புகழ் பெற்ற வழக்கறிஞராகவும், அரசியல் வாதியுமாகத் திகழ்ந்த ஸர். சிவஸ்வாமி அய்யரின் உறவினர் பஞ்சாபகேச சாஸ்திரியார். இவருடன் கல்வி பயின்றவருள் ஸ்ரீ காஞ்சீ சங்கராசார்ய ஸ்வாமி மடத்தில் (பிற்காலத்தில்) ஆஸ்தான வித்வாஞக இருந்த ஸ்ரீ ராமஸ்வாமி சாஸ்திரி என்பார் ஒருவராவார்.

1906-ஆம் ஆண்டில், இவர் சென்னை மாநகரை அடைந்து, அங்கு மைலாப்பூர் ஸம்ஸ்க்ருதக் கல்லூரியில், வேதாந்தப் பேராசிரியராகப் பதவி ஏற்ருர். எட்டாண்டுகள் அக்கல்லூரியில் திறம்படப் பணியாற்றினுர். அக்காலத்தில் இவரிடம் படித்த மாணவர்களுள், நூரணி அநந்தகிருஷ்ண

சாஸ்திரி, பக்ஷிதீர்த்தம் ராமசந்த்ர தீக்ஷிதர், வெங்கடேச தீக்ஷிதர், ஆகியோர் பின்னர் சிறப்புடன் திகழ்ந்த வித்வான் களாவர். இவருடைய கல்வித்திறனையும், போதனுமுறைச் சிறப்பையும் அறிந்த கொச்சி மஹாராஜா இவரைத் தமது திருப்பணித்துறை ஸம்ஸ்க்ருதக் கல்லூரியில் ஆசிரியராக நியமித்தார். மூன்று வருடங்கள் சாஸ்திரியார் இக்கல்லூரி யில் ஆசிரியராக இருந்து வந்தார். மைஸூர் ராஜ்யத்திலும் சிறிதுகாலம் பணியாற்றியிருக்கிருர். இவருக்கும் இந்திய அரசு மஹா மஹோபாத்யாய என்ற சிறப்புப் பட்டத்தை வழங்கியது.

இவர் தமது வாழ்நாளில் நூல் எதையும் எழுதிப் பிரசுரித்ததாகத் தெரியவில்லை. ஆனால் அனந்த ஆழ்வாரின் ந்யாயபாஸ்கரம் என்ற புத்தகத்தைக் கண்டித்து, ப்ரஹ்மானந்தரின் வழியைப் பின்பற்றி ஒரு நூலுக்கான குறிப்புகளை எழுதி வைத்திருந்தாராம். இவருடைய மறைவுக்குப் பின், கொச்சி மஹாராஜா பரீக்ஷித் தம்பிரான் அவர்களும், தற்காலம் கும்பகோணம் அத்வைத ஸபா பண்டிதர் ஸ்தானத்தை அணிசெய்யும், பண்டிதராஜ, வேதாந்த வாகீச, ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரியாரும் சேர்ந்து, பஞ்சாபகேச சாஸ்திரியின் குறிப்புகளைத் தொகுத்து, ப்ரஹ்மானந்தீய பாவப்ரகாசம் என்ற பெயருடன் 1961-ஆம் ஆண்டில் பிரசுரித்துள்ளனர்.



# ஸ்ரீ அனந்தக்ருஷ்ண சாஸ்திரி

கேரளத்தில் 1886-ஆம் ஆண்டில் பாலக்காடு எனும் சிறு நகரத்தில், நூரணி அக்ரஹாரத்தில் அனந்தக்ருஷ்ண சாஸ்திரி பிறந்தார். அவரது தந்தை ஸுப்ரஹ்மண்ய வாத்யார் என்பவர் அவ்வூரில் முக்ய வைதீக பரம்பரையைச் சேர்ந்தவர். 1899-ஆம் ஆண்டில் அனந்தக்ருஷ்ண சாஸ்திரி அக்காலத்திய கொச்சி ஸமஸ்தானத்தைச் சேர்ந்த சித்தூரிலுள்ள வேதசாஸ்த்ர பாடசாலையில்சேர்ந்து படித்தார். அங்கு ஐந்தாண்டுகள் வேதமும், ஸம்ஸ்க்ருதமும் பயின்றூர். பின்னர் 1904-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் சிதம்பரத்தில் உள்ள சாஸ்த்ர பாடசாலையில் சேர்ந்து ஹரிஹர சாஸ்திரிகள் என்ற மாபெரும் வித்வானிடம் இரண்டாண்டுகள் வ்யாகர்ணமும் தர்க்க சாஸ்திரமும் படித்தார்.



1906-ஆம் ஆண்டு இறுதியில் சிதம்பரத்திலிருந்து சென்னைக்குச் சென்று, மைலாப்பூர் ஸம்ஸ்க்ருதக் கல்லூரியில் மஹாமஹோபாத்யாய பஞ்சாபகேச சாஸ்திரிகளிடம் வேதாந்தமும், ஸ்ரீ வேங்கடஸுப்பா சாஸ்திரிகளிடம்

மீமாம்ஸா சாஸ்திரத்தையும் கற்றறிந்தார். மற்றும் இவர் ஸ்ரீ சந்த்ரசேகர சாஸ்திரிகளிடமும் படித்துவந்தார். அக்காலத்திலேயே தர்மசாஸ்திரத்தையும் பயின்று வந்தார். 1910-ஆம் ஆண்டு இறுதியில் காளஹஸ்தியில் நடந்த அத்வைத ஸபையின் பரீக்ஷையில் பங்குகொண்டு வெற்றி பெற்று, தோடாவும் இரண்டு சால்வைகளையும் வெகுமானமாகப் பெற்ருர். இதன் பின்னர் 1911-ஆம் ஆண்டு திருப்பதி ஸம்ஸ்க்ருதக் கல்லூரியில் ஆசிரியராகப் பதவி ஏற்ருர். இப்பதவியில் ஆறு ஆண்டுகள் செவ்வனே பணியாற்றினுர். 1917-ஆம் ஆண்டு கல்லிடைக்குறிச்சியில் (திருநெல்வேலி ஜில்லா) புதியதாக ஆரம்பிக்கப்பட்ட ஸம்ஸ்க்ருதக் கல்லூரியின் முதல்வராக இவர் நியமிக்கப்பட்டார். ஆனுல் இப்பதவியில் சுமார் மூன்று மாதகாலமே இவர் இருந்தார்.

1917-ஆம் ஆண்டு இறுதியில் சாஸ்திரியார் கல்கத்தா ஸர்வகலாசாலையின் பட்டமேல்படிப்பு இலாகாவில் விரிவுரையாளராக நியமிக்கப்பட்டார். இப்பதவியில் முப்பதாண்டு காலம் நீண்ட சிறப்பான பணிபுரிந்தார். 1947-ஆம் ஆண்டில் ஜுலை மாதம் இப்பதவியை ராஜினுமா செய்துவிட்டு, சாஸ்திரியார் பொதுப்பணிகளில் ஈடுபட்டார். 1948-ஆம் ஆண்டில் பம்பாய் நகரத்தில் உள்ள பாரதீய வித்யாபவனத்தில் கீதை, வாசஸ்பதீய வகுப்புகளுக்குத் தலைவராக விளங்கினுர். பின்னர் பகவத்கீதை, மஹாபாரதம் முதலியவற்றில் சொற்பொழிவுகள் ஆற்றுவதிலும், புருஷஸூக்த, ஸ்ரீஸூக்த, அதிருத்ர ஹோமங்களை மக்களின் நலனுக்காக ஆங்காங்கு நடத்துவதிலும் காலம் கழித்தார்.

கல்கத்தா பல்கலைக்கழகத்தில் இவர் பணியாற்றும் போதே 1927-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 3-ஆம் தேதி சாஸ்திரியாருக்கு இந்திய அரசாங்கம் "மஹா மஹோபாத்யாய" பட்டத்தை அளித்தது. மற்றும் ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள் இவருக்கு "சாஸ்த்ர ரத்னுகரம்" என்ற

பிருதை அனுக்ரஹித்துள்ளார்கள். இவையன்றி "வேதாந்த விசாரத", "மீமாம்ஸா ரத்னம்" போன்ற சில கௌரவப் பட்டங்களையும் இவர் பெற்ருர். கல்கத்தா பல்கலைக்கழகத்திலும், காசி, அலஹாபாத், பாட்னு, ஆந்திரா பல்கலைக்கழகங்களிலும் பல முறை ஆய்வாளராக இருந்திருக்கிருர்.

இவர் பல நூல்களை இயற்றியுள்ளார். அவைகளில் அத்வைத சிந்தா கௌஸ்துபம், ப்ரபா என்ற தன்னுடைய விரிவுரையுடன் கூடிய கர்மப்ரதீபம், அதேபோல தன்னுடைய உரையுடன் கூடிய வேதாந்த பரிபாஷா, அத்வைத தீபிகா, அத்வைத மார்த்தாண்டம், வேதாந்த ரக்ஷாமணி, ஸனுதன தர்மப்ரதீபம், லோகந்த்ய விமர்சம், அத்வைத தத்வசுத்தி, சதுர்க்ரந்தி, முதலியவைகளையும் இயற்றியுள்ளார்.

மற்றும் ஒன்பது உரைகளுடன் கூடிய ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தையும் இயற்றியுள்ளார். இவையன்றி மீமாம்ஸா சாஸ்த்ர ஸங்க்ரஹம், ந்யாயாம்ருத அத்வைத ஸித்தி ஆகியவைகளும் இவரால் இயற்றப்பட்டன. இவை எல்லாவற்றிற்கும் மேலாக சததூஷணீ-பரீக்ஷண (அல்லது சதபூஷணீ) என்ற மாபெரும் நூலையும், பகவத் கீதா பாரதீய தர்சனுனிச என்ற நூலையும் தனது வயது முதிர்ந்த காலத்தில் இயற்றி வெளியிட்டார்.

ஸம்ஸ்க்ருதத்தில் விவாதம் செய்வதிலும், பேசுவதிலும் சாஸ்திரியார் இணையற்றவர். அனந்தக்ருஷ்ண சாஸ்திரி தன்னுடைய இறுதிக்காலத்தைப் தன் பிறப்பிடமான நூரணியில் கழித்து, அங்கேயே இறைவனடி சேர்ந்தார்.



# ஸ்ரீ அ. சின்னஸ்வாமி சாஸ்திரிகள்

சின்னஸ்வாமி சாஸ்திரிகள் 1889-ஆம் வருடம் (விரோதி வருஷம், வைகாசி) 10-ஆம் தேதி வட ஆற்காடு ஜில்லா போளூர் தாலுக்கா, பாஹு நதி தீரத்திலுள்ள மண்டகுளத்தூர் அக்ஹாரத்தில் ஜனித்தார். ஷட்கர்மநிரதர்களான இவரது தகப்பனர் அப்பாஸ்வாமி சாஸ்திரிகளிடம் குலக்ரமமாக வந்த வேதாத்யயனத்தை க்ரமாந்தம் அத்யயனம் செய்து, வேதாந்த விசாரம் செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன், கற்பூண்டி வேங்கடரமண சாஸ்திரிகளிடம் காவ்யம், நாடகம், அலங்காரம், வ்யாகர்ணம் முதலியவற்றை அப்யஸித்து,



பிறகு கல்லூரியில் 1907-ஆம் ஆண்டில் மாணவனுகச் சேர்ந்தார். அங்கு இவர் ம. ம. வெங்கிடஸுப்பா சாஸ்திரிகளிடமும், ம. ம. குப்புஸ்வாமி சாஸ்திரிகளிடமும் மீமாம்ஸா சாஸ்திரத்தையும், ம. ம. சந்திரசேகர சாஸ்திரிகளிடம் வேதாந்தத்தையும் நன்கு பயின்ருர். கல்வி பயிலும் காலத்திலேயே தான் படித்த மீமாம்ஸா சாஸ்திரத்தைச் சிஷ்யர்களுக்கு நன்கு போதித்து, மீமாம்ஸா க்ரந்தங்களை நன்கு சோதித்து தேசத்தில் பிரசாரம் செய்யவேண்டும் என்ற உறுதியும்

பெற்ருர். இவருடைய போதனு சக்தியைக் கண்டு சந்தோஷமடைந்த ம. ம. குப்புஸ்வாமி சாஸ்திரிகள் இவரை திருவையாறு ஸம்ஸ்க்ருதக் கல்லூரியில் மீமாம்ஸா உதவி ஆசிரியராக நியமிக்கும்படி காரியதரிசிகளுக்குச் சிபாரிசு செய்தார்.

சின்னஸ்வாமி சாஸ்திரிக்கு இப்பதவி கிட்டியது. அவ் விடம் இவருக்கு அநேக சிஷ்யர்கள் ஏற்பட்டனர். சில ஆண்டுகளுக்கு முன்னர் மயிலை ஸம்ஸ்க்ருதக் கலாசாலை முதல் வராகப் பணியாற்றிய ஸ்ரீ பாலஸுப்ரமண்ய சாஸ்திரி களும் இவரது மாணவர்களில் ஒருவர். பின்னர் சின்ன ஸ்வாமி சாஸ்திரிகள் ஜெய்பூர் ஸ்மஸ்கிருதக் கல்லூரியில் பேராசிரியராகச் சிறிது காலம் பணியாற்றினுர். 1918-ஆம் ஆண்டு காசி ஹிந்து விச்வ வித்யாலயத்தில் பேராசிரியராக நியமிக்கப்பட்டு, சின்னஸ்வாமி சாஸ்திரியார் வடநாட்டில் மீமாம்ஸா சாஸ்திரம் விளங்கக் காரணமானுர். அங்கு இவரிடம் அநேக சிஷ்யர்கள் மீமாம்ஸா சாஸ்திரத்தைச் சிரத்தையுடன் கற்றனர். சாஸ்திரிகள் கலாசாலையில் படிக் கும் சிஷ்யர்களுக்குப் பாடம் கற்பிக்கும் முறையைக் கேட்டு, பிற பாடசாலைகளில் சாஸ்திரங்களைப் போதித்து வந்த சில பண்டிதர்கள், மீமாம்ஸா சாஸ்திரம் கற்க வேண்டுமெனக் கேட்டபொழுது, சாஸ்திரியார் தனது சிரமத்தையும் பாராட் டாமல், வீட்டில் அவர்களுக்குச் சாஸ்த்ரத்தின் உட்கருத்துக் களை விளக்கி வந்தார். இதனுல் வடநாட்டில் உள்ள ஸம்ஸ்க் ருத ஸ்தாபனங்களின் கார்யதரிசிகள் சாஸ்திரிகளைத் தங்களது குழுவில் ஒரு அங்கத்தினராக ஏற்படுத்திக் கொண் டனர்.

1939-ஆம் ஆண்டில் திருப்பதியில் புதிதாக ஆரம் பிக்கப்பட்ட ஸ்ரீ வேங்கடேச்வர ஓரியண்டல் கல்லூரியில் முதல்வராக நியமிக்கப்பட்டு, ஒரு வருட காலம் பணி புரிந் தார் சாஸ்திரிகள். பிறகு 1940-ஆம் ஆண்டு காசி ஹிந்து விச்வ வித்யாலயத்தின் ஒரு பகுதிக்குத் தலைவராக நியமிக்கப் பட்டு, மறுபடியும் காசியில் வசித்து, முன்போலவே

மாணுக்கர்களுக்கு இவர் போதித்து வந்தார். **மீமாம்ஸா கௌஸ்துபம், தௌதாதி தமததிலகம்,** ப்ருஹதீ முதலிய மீமாம்ஸா க்ரந்தங்களேயும், **ஆபஸ்தம்பச்ரௌத ஸூத்ரம், ஆபஸ்தம்ப க்ருஹ்ய ஸூத்ரம், ஆபஸ்தம்ப தர்மஸூத்ரம், தாண்ட்ய மஹாப்ராஹ்மணம், போதாயன தர்மஸூத்ரம், மத்வதந்த்ர முகமர்த்தனம்** முதலிய வைகளேயும், நன்கு சோதித்து, சாஸ்திரியார், காசியிலிருக்கும்போது பிரசுரம் செய்தார். மீமாம்ஸா ந்யாயப் ப்ரகாசத்திற்கு **ஸாரவிவேசனீ** என்ற விரிவுரையை இயற்றினர். உத்திரஷட்கபதார்த்த ஞானத்தைச் சிஷ்யர்கள் எளிதில் அறிய, '**தந்த்ர ஸித்தாந்த ரத்னுவளி**' என்ற நூல் 1944-ஆம் ஆண்டில் இவரால் இயற்றப்பட்டது.

இவரது கல்வித் திறனேக் கௌரவித்து இந்திய அரசாங்கம் 1940-ஆம் ஆண்டு இவருக்கு 'மஹாமஹோபாத்யாய' என்ற பிருதை வழங்கியது. 1942-ஆம் வருடம் ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிபதியவர்கள், 'சாஸ்த்ர ரத்னுகர' என்ற பிருதை சாஸ்திரியாருக்கு அனுக்ரஹித்தார்கள்.

இவர் காசி ஸர்வகலாசாலேயில் எல்லா ஸபைகளிலும் அங்கத்தினராக இருந்து கொண்டே, ஆந்திரா, லக்ஷ்மண புரி, அலஹாபாத், அண்ணுமலே, மதருஸ், பஞ்சாப் ஸர்வகலா சாலேகளிலும், காசி ஸம்ஸ்க்ருதக் காலேஜ் பரீக்ஷை, பீஹார், கல்கத்தா, மைஸூர், ஜய்பூர் அரசாங்க ஸம்ஸ்க்ருதக் கலாசாலேப் பரீக்ஷைகளுக்கும் பல காலம் பரீக்ஷகராகப் பணியாற்றியுள்ளார்.

1947-ஆம் ஆண்டில் கல்கத்தா ஸர்வகலாசாலேயில் மீமாம்ஸா விரிவுரையாளராகநியமிக்கப்பட்டார். 1951-ஆம் வருடம் மேற்கு வங்க ஸர்க்காரால் புதிதாக ஆரம்பிக்கப்பட்ட "ப்ராசீனசப்யதா விமர்சம்" என்ற நிறுவனத்தில் தர்ம சாஸ்த்ர பரிசீலனம் செய்ய நியமிக்கப்பட்டு, மூன்று வருட காலம் பேராசிரியராகப் பணியாற்றினர். வடநாட்டில் பல ஸம்ஸ்க்ருத ஸமாஜங்களில் ஆண்டு விழாக்களில் தலேமை தாங்கியுள்ளார். மேலும் தர்பங்காவில் நடந்த ப்ராச்ய

வித்யா ஸம்மேளனத்தில் வேத விபாகத்திற்குத் தலைவராக இருந்து, சிறு சொற்பொழிவின் மூலம், வேதத்தின் அவசியத்தை வலிவுறுத்தினர். இதைத் தவிர சில மீமாம்ஸா, ச்ரௌதபதங்களின் பொருள்களைச் சிறிய ப்ரபந்தமாக இயற்றியுள்ளார்.

1956-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 11-ஆம் தேதி ஏற்பட்ட இவருடைய மறைவு ஸம்ஸ்க்ருத உலகிற்கு பெரும் நஷ்டத்தை உண்டாக்கியது. தான் மரணமடையும் வரை தம் காலத்தை இவர் ஸம்ஸ்க்ருதத்தின் தொண்டிலேயே கழித்தார் என்பதற்கு, காலகதியடையும்போது சென்னை சட்ட சஞ்சிகை அச்சகத்தில் (Madras Law Journal Press) பிரசுரமாகியுள்ள ராமாயணத்தின் இரண்டாம் பதிப்பைச் சோதித்து, இயற்றுவதில் ஈடுபட்டிருந்தார் என்பதே சான்ருகும்.



# ஸ்ரீ டி. கணபதி சாஸ்திரிகள்

கேரள நாட்டில் தம் வாழ்நாளில் பெரும் பகுதியைக் கழித்த கணபதி சாஸ்திரி 1860-ஆம் ஆண்டில் தோன்றினர். இவர் ஸாஹித்யம், வ்யாகரணம் ஆகிய சாஸ்திரங்களில் சிறு வயதிலேயே மனதை ஈடுபடுத்தி அவைகளைக் கற்றறிந்தார். திருவனந்தபுரம் கைப்பிரதிகள் நூல் நிலையத்தின் காப்பாளராக (curator) நியமனம் பெற்ற இவர், காவ்யங்களை இயற்றுவதில் ஊக்கமும், ஆராய்ச்சி மனப்பான்மையும் உடையவரானர். மஹாகவி பாஸனின் நாடகங்களின் ஆராய்ச்சிகளினுல் இவர் புகழடைந்தார்.

பாஸகவியின் நாடகங்களுக்குத் தாமே சிறந்த உரை நூல்களை இயற்றி பிரசுரித்தார். மற்றும் கௌடில்யரின் **அர்த்தசாஸ்திரத்திற்கு** உரை எழுதியுள்ளளார் கணபதி சாஸ்திரி. திருவாங்கூர் மன்னர்களின் சரித்திரத்தை விளக்கும் **ஸ்ரீ மூல சரித்ரம்** என்ற ஒரு நூலையும் இயற்றி பிரசுரித்துள்ளார். 1892-ஆம் ஆண்டில் திருவாங்கூர் மன்னரின் துலாபார விழா நடைபெற்றது. அவ்வமயம் மன்னரின் எடைக்கு ஈடான பொன்னும் ரத்னங்களும் வித்வான்களுக்குப் பங்கிட்டு வழங்கப்பட்டது. இவ்விழாவைப் புகழ்ந்து கணபதி சாஸ்திரியார் '**துலா புருஷ தான காவ்யம்** என்ற ஒரு கவிதையை எழுதினர்.

மற்றும் அலங்கார அணிகளை உவமைகளுடன் விளக்கி ஒரு சிறு காவ்யத்தைப் படைத்தார். இதற்கு **அர்த்தார்த்த சித்ரமணிமாலா** எனப் பெயர். மேலும் ராமேச்வரப் புனித யாத்திரையைப் பற்றி **ஸேதுயாத்ரா வர்ணனம்** என்ற சிறு நூலையும், நம்நாட்டுச்சரித்ரத்தை விவரித்து **பாரதானுவர்ணனம்** என்ற புத்தகத்தையும் இயற்றி வெளியிட்டுள்ளார். இப்படி தேச சரித்திரத்தை ஸம்ஸ்க்ருத மொழியில் நல்லமுறையில் வடித்துதவிய கணபதி சாஸ்திரியாருக்கு இந்திய அரசாங்கம் மஹாமஹோபாத்யாய பட்டமளித்து, அவரைக் கௌரவித்தது. அறுபத்தாறு ஆண்டுகள் ஜிவித்து, ஸம்ஸ்க்ருதத்திற்கு பல வழிகளில் பணிபுரிந்த கணபதி சாஸ்திரி 1928-ஆம் ஆண்டில் அமரரானர்.

## ஸ்ரீ நரஸிம்ஹாசார்யார்

தஞ்சை ஜில்லாவில் கும்பகோணத்திற்குத் தெற்கில் சுமார் பத்து மைல் தூரத்தில் குடவாயில் (குடவாசல்) என்று ஒரு சிவத்தலம் உள்ளது. அவ்வூரில் சென்ற நூற்ருண்டில் பிறந்தவர் நரஸிம்ஹாசார்யார். இவர் இளமையில் நாவல் பாக்கம் ஐயா, நரஸிம்ஹ தாதாசார்யாரிடம் தர்க்க சாஸ்த்ரமும் வேதாந்தமும் படித்தார். ஸாங்க்யம், பாசுபத மத தத்வங்களைத் தெளிவாக எடுத்துரைப்பதில் மிகவும் திறன் உடையவர். இவர் தமிழ் மொழியிலுள்ள திவ்யப் பிரபந்த நூலின் கருத்துக்களைப் பாமர மக்களிடையே பரப்புவதில் பெரிதும் ஈடுபட்டிருந்தார். ஸ்வாமி தேசிகனின் பரமத பங்கம் என்ற நூலின் சில பகுதிகளுக்கு இவர் உரை எழுதியுள்ளார். இவருக்கு மஹாமஹோபாத்யாய பிருது வழங்கப் பட்டது. இவர் தமிழ்நாடு முழுதும் அடிக்கடி சுற்றுப் பிரயாணம் செய்து சொற்பொழிவாற்றிப் புகழ் பெற்றனராம்.

---

மற்றும் ஸம்ஸ்க்ருத மொழியில் தேர்ச்சிபெற்று, திருச்சிராப்பள்ளி அர்ச். சூசையப்பர் கல்லூரியில் (St. Joseph's College) ஆசிரியராகப் பணியாற்றி, மஹா மஹோபாத்யாய பிருது பெற்ற ஸ்ரீ T. ஸ்ரீனிவாசய்யங்கார், காளிதாஸ மஹா கவியின் சாகுந்தலத்திற்குச் சிறந்த உரை எழுதிப் புகழ்பெற்று, பின்னர் மஹா மஹோபாத்யாய பிருது பெற்ற திருவஹீந்த்ரபுரம் ஸ்ரீனிவாஸசார்யார் என்ற தென்னுட்டைச் சேர்ந்த இரு அறிஞர்களைப்பற்றி, முயன்றும் விபரங்கள் கிடைக்கப் பெருததால், அவர்களின் பெயர்களை மாத்திரம் தந்து திருப்தியடைய வேண்டியிருக்கிறது.

# ஸ்ரீ K. S. க்ருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்

**தி**ருச்சிராப்பள்ளி ஜில்லா முசிரி தாலூகாவைச் சேர்ந்த காட்டுப்புத்தூர் கிராமத்தில் 'கந்தாடை' எனும் குடும்பப் பெயர் பெற்ற அந்தணர் வகுப்பில் மன்மத வருடம் ஆவணி மாதம் ஏழாம் நாள் வியாழக்கிழமை (1895) வேங்கட ஸுப்பராம ஐயர் என்ற ஸ்வாமி ஐயர் அவர்களுக்குக் க்ருஷ்ணமூர்த்தி சாஸ்திரி மூன்றாவது குமாரராகப் பிறந்தார். சிறு வயதில் இவர் ஒருவருக்கும் கட்டுப்படாமல் துஷ்டச் செயல்களில் ஈடுபட்டதால் தாய் தந்தையருக்கு மிகவும் கஷ்டத்தை உண்டு பண்ணி வந்தார். ஏழாவது வயதில் உபநயனம் செய்விக்கப்பட்டு, குளித்தலையில் உள்ள பள்ளியில் சேர்க்கப்பட்டு, கல்வி பயின்றார். அப்போதே இனிமையாகப் பாடும் ஆற்றல் பெற்று விளங்கினார். மூன்றாவது பாரம் வரையில் படித்தார்.



அப்போது இவரது தந்தை கஷ்டநிலையில் இருந்ததால் மேற்கொண்டு பள்ளிப் படிப்பைத் தொடர முடியவில்லை. ஆதலால் கரூரில் உள்ள சாஸ்த்ர பாடசாலையில் சேர்க்கப்பட்டு காவ்யம், நாடகம் ஆகியவற்றை பயின்றார் இவர்,

மேதையான பூவராகாச்சார்யார் இவரது குரு. சிறிது காலத்திற்குப் பிறகு சாஸ்த்ராப்யாஸம் செய்யும் நோக்ககத் துடன், ஸ்ரீநிவாஸன் என்ற நண்பனுடன், கையில் போதிய பணம் இல்லாததால் ஒருவரிடமும் சொல்லிக்கொள்ளாமல் கால்நடையாகவும், ரயில் மார்க்கமாகவும், திருவையாறு சென்று, க்ருஷ்ணமூர்த்தி அங்குள்ள அரசர் ஸம்ஸ்க்ருதக் கல்லூரியில் சேர்ந்தார். அவ்வமயம் அக்கலாசாலை முதல்வராகயிருந்த ஸ்ரீ குப்புஸ்வாமி சாஸ்திரிகளும், ஸ்ரீ R. V. க்ருணமாச்சார்யார் அவர்களும், இவரை பரீட்சித்தார்கள். இவருடைய விடை பகரும் ஸாமர்த் தியத்தைக் கண்டு மிகவும் சந்தோஷம் அடைந்து, தலைவர் இவரைக் கல்லூரயில் சேர்த்துக்கொண்டார்.

திருவையாற்றிலும் இவர் நீண்ட காலம் தொடர்ந்து படிக்கவில்லை. அதை விட்டு, கும்பகோணம் சென்று, ராஜா பாடசாலையில் சேர்ந்தார். கும்பகோணத்திலும் நெடுநாள் இவர் தங்கவில்லை. அங்குள்ள மணியக்காரருக்கும் இவருக்கும் தகராறு ஏற்பட்டது. இச்சமயம் இவருக்குத் திருமணம் நடந்தேறியது. அங்கிருந்து புதுக்கோட்டைக்குச் சென்றார். அச்சமயம் அங்கு அரண்மனையில் தானாதிகாரி யாய் இருந்த கோபால சாஸ்திரிகளிடம் வாரச்சாப்பாடு சாப்பிட்டுக்கொண்டே வ்யாகரணம் பயின்றார். மாதத்தில் சில நாட்கள்கூட பாடம் நடப்பது அரிதாக இருந்தது. அதனால் இவர் மனம் நொந்து மணத்தட்டைக்கு வந்திருந்த போது, அங்கு தற்செயலாக வந்திருந்த சிதம்பரம் தண்டபாணி ஸ்வாமி தீக்ஷிதர் அவர்களை இவர் ஸந்தித்தார், தீக்ஷிதர் இவரைப் பரீட்சித்துத் திருப்தியடைந்து, " நீ சிதம்பரத்திற்கு வா. பாடம் சொல்கிறேன். வரும்போது அஷ்டாத்யாயியை நன்கு படித்து வா ", என்று சொல்லிய துடன், மனப்பூர்வமாக அனுக்ரஹமும் செய்தார்கள். அப்படியே சிதம்பரம் சென்று வ்யாகரணம் படித்தார் க்ருஷ்ணமூர்த்தி சாஸ்திரி,

படிக்கும் காலத்திலேயே மற்ற வித்யார்த்திகளுக்கு மிகவும் நல்ல முறையில் கௌமுதி, நாடகம் முதலியவைகளை இவரே பாடம் சொல்வது வழக்கம். இதனால் வ்யாகரணத்தில் இவருக்கு நாளுக்கு நாள் தெளிந்த ஞானம் ஏற்பட வாய்ப்பு இருந்தது. இவரது உழைப்பு அதிகம். ஆங்காங்கு சென்று பலரை வாதத்திற்கு அழைத்து பங்கப்படுத்துவார். ஆதலால் இவரைத் துஷ்டர் என்றே அனைவரும் கூறி வந்தனர். ஒருஸமயம் தீக்ஷிதர் அவர்களைக் காண ஸர். சிவஸ்வாமி ஐயர், நீதிபதி சேஷகிரி ஐயர் முதலியோர் வந்தார்கள். அவர்களைப்பற்றி கவிதைகள் புனைந்து இனிமையாகப் படிக்க, தீக்ஷிதர் அவர்கள் இவரைத்தான் கட்டளையிட்டாராம். தீக்ஷிதர் அவர்களுக்கு இந்திய அரசு ''மஹாமஹோபாத்யாய'' பட்டம் வழங்கினார்கள். அதற்காகக் கலெக்டர் பேரவை கூட்டினார். அரசர் பெருமானைப் பற்றியும் தனது ஆசானைப் பற்றியும் பாடல்கள் பல இயற்றி, பேரவையில் வாசித்து, அனைவரையும் க்ருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் களிப்புறச் செய்தார். ஒருஸமயம் மஹேந்த்ரமங்கலம் (திருச்சி ஜில்லா) என்னும் கிராமத்தில் முகாம் செய்திருந்த ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் அவர்களும் இவரது பாடல்களைக் கேட்டு மெச்சி ஸம்பாவனை செய்தார்கள். நங்கவரம் ராஜப்பய்யர் அவர்களின் உறவினரான லெக்ஷ்மீநாராயண ஐயர் இவருக்கு வேண்டிய அளவு பொருளுதவி செய்தார்.

பாலக்காட்டுக்கடுத்த சித்தூர் என்னும் ஊரில் மிகமிகப் பிரசித்தி பெற்ற வேதசாஸ்த்ர பாடசாலை இருந்தது. அதில் உபகாரச் சம்பளம் மாதம் ரூ. 15/- வீதம் பெற்று, மனைவியோடு இல்லறம் நடத்திக்கொண்டு, வ்யாகரணத்திலுள்ள உயர்ந்த நூல்களை பரமேச்வர சாஸ்திரிகளிடம் க்ருஷ்ணமூர்த்தி சாஸ்திரி பயின்றார். அக்காலத்தில் மைஸூரில் பரீக்ஷை கொடுத்து உத்தம ஸம்பாவனையும் பெற்றார். பரமேச்வர சாஸ்திரிகளுக்கு சிறிதுகாலம் உதவி ஆசிரியராக இருந்தார். அப்போது புதுக்கோட்டையிலும் பரீக்ஷை கொடுத்துத் தேறினார். 1924-ஆம் வருடம் சிரோமணி

பரீக்ஷையிலும் தேறினர். இவரது சொல்வன்மையையும், புத்தி கூர்மையையும் நன்கு அனுபவித்தறிந்த R. கிருஷ்ண மாசார்யார் மதுரையில் உள்ள ராமேச்வரம் தேவஸ்தான பாடசாலைக்கு இவரை ஆசிரியராக அனுப்பும்படி சித்தூர் பாடசாலை மானேஜரைக் கேட்டார்கள். ஆனல் வேதாந்தம் படிக்காமல் உத்யோகத்திற்குப் போகமாட்டேன் என்று சாஸ்திரியார் மறுத்துவிட்டார். தனக்குக் கிடைத்த 25 ரூபாய் சம்பளத்தை வேண்டாம் என்று தள்ளிவிட்டு, 20 ரூபாய் உபகாரச் சம்பளத்தைப் பெற்று கருங்குளம் க்ருஷ்ண சாஸ்திரிகளிடம் ப்ரகரணங்கள் எல்லாவற்ருேடும் ப்ரஸ்தானத்ரயம் படித்து முடித்தார். அப்போது ஒவ்வொரு வருடமும் வகுப்புப் பரீக்ஷையில் முதலாவதாகத் தேறி, பரிசுகள் பெற்றுள்ளார். சித்தூரிலிருக்கும்போது ஸதீவிலாஸம் என்ற சிறு காவ்யம் ஒன்றை இயற்றி, 'காமதேனு' என்னும் பத்திரிகையில் வெளியிட்டார். ஸாவித்ரி, ஸத்யவான் இவர்களைக் குறித்து எழுதப்பட்ட இப்புத்தகம் எல்லோராலும் போற்றப்பட்டது. அப்போதே இவர் ஸம்ஸ்க்ருதத்திலேயே அனேக கீர்த்தனைகள் செய்து ஹரிகதா காலக்ஷேபம் செய்வது வழக்கம். இப்பொழுது வழக்கில் இருக்கும் 'பக்தி ஸுதாதரங்கிணீ' என்ற நூலில், மூன்று பாட்டுக்கள் சிதம்பரத்திலிருக்கும் போது, இவர் இயற்றியவைகளாம். 1925-ஆம் வருடம் ராமேச்வரம் தேவஸ்தான பாடசாலைக்கு அழைக்கப்பெற்று, வ்யாகரண உதவி ஆசிரியராக இருந்து இரண்டு, மூன்று வருடங்களுக்குப் பிறகு இலக்கணப் பேராசிரியரானர். அனேகர் இவரது பாடம் சொல்லும் திறமையைப் பாராட்டியிருக்கிருர்கள்.

1939-ஆம் வருடம் காலடிக்கு விஜயம் செய்த ச்ருங்ககிரி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் இவரது கதைகளை ஒருவாரம் அமைதியாகக் கேட்டுச் சால்வையும் ஸன்மானமும் வழங்கினர்கள்.

ஸ்ரீரங்கத்தில் உள்ள சங்கர குருகுலத்தில் த்ரபுரஸீந்தரி ப்ரதிஷ்டை செய்யப்பட்டபோது, இவர் கதா காலக்ஷேபம்

புரிந்தார். அப்போது, "**ஸாஹித்ய பூஷணம்**" என்ற பிருதமும் சால்வையும் இவருக்கு ச்ருங்கேரி ஆசார்ய ஸ்வாமிகளால் அளிக்கப்பட்டது. ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளின் ஸன்னிதானத்தில் கதா காலக்ஷேபம் செய்து ஜோடி சால்வைகளும் "**ஸத்கதா கண்டீரவ**" என்ற பிருதமும் பெற்ருர் இவர்.

1954-ஆம் ஆண்டில் இவர் ச்ருங்ககிரி சென்று, அங்கு ஆஸ்தான வித்வானுக இருந்தார். 1955-ஆம் ஆண்டு முதல் சென்னையிலேயே நிரந்தரமாக வசிக்க ஆரம்பித்தார். 1945-ஆம் ஆண்டு கொச்சி ராஜாவினுல் "**பண்டிதராஜ**" என்ற பிருது ஒரு தங்கப்பதக்கத்துடன் இவருக்கு வழங்கப் பட்டது. திருவனந்தபுரம் மஹாராஜாவினுல் நவராத்திரி ஸபையில் இருமுறை கௌரவிக்கப் பெற்ருர். 1945-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 13-ஆம் தேதி இந்திய அரசாங்கம் இவருக்கு '**மஹாமஹோபாத்யாய**' பட்டம் அளித்தது. அவ்வமயம் லார்ட் மௌண்ட்பாட்டன் பிரபு தம்பதிகள் மதுரை திருமலை நாயக்கர் மஹாலில் சாஸ்திரிகளுக்கு ஸன்மானம் வழங்கினுர்கள். 1947-ஆம் ஆண்டு சுதந்திர தினத்தன்று சென்னை அரசினரால் '**ஆஸ்தான கவி**' **(Poet Laureate in Sanskrit)** என்ற பட்டமும் 1000 ரூபாய் ஸன்மானமும், சால்வையும், கோபுரம் போட்ட பதக்கமும் சாஸ்திரிகளுக்கு வழங்கப்பட்டன. சென்னையில் அனேகம் பிரமுகர்களுக்குப் பாடம் சொல்லி வந்தார். 1963-ஆம் ஆண்டு இவருக்கு ஸர். ராதாகிருஷ்ணன் மூலம் ராஷ்டிரபதி ஸன்மானமும் கொடுக்கப்பட்டது. இதனுல் வருடத்திற்கு ரூ. 1500/- கிடைத்தது. பிறகு இதை வருடத்திற்கு ரூ. 3000/- ஆக்கினுர்கள். 1971-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 31-ஆம் தேதி கார்வேட்நகருக்கு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளால் அழைக்கப்பட்டு, வித்யார்த்திகளுக்கு பரீக்ஷாதிகாரியாக இருந்ததற்காக க்ருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் இரண்டு சால்வைகளும், ரூ. 1500/- ஸன்மானமும் பெற்ருர். பின் அவ்வாண்டு ஸெப்டம்பர் மாதம் 16-ஆம் தேதி சனிக்கிழமை ப்ரதோஷ வேளையில் க்ருஷ்ணத் திரயோதசி திதியில் சாஸ்திரிகள் சிவபதம் அடைந்தார்.

மஹாமஹோபாத்யாய, பண்டிதராஜ, சாஸ்த்ர ரத்னகர, வ்யாகரண பஞ்சானன, கவிகோகில, வ்யாகரண பூஷணம், ஸத்கதா கண்டீரவ முதலிய பிருதுகளை அடைந்தவர் ஸ்ரீ க்ருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்.

இவரிடம் வ்யாகரணம் படித்து சிறந்த அறிவாளிகளாக விளங்குபவர் பலர்.

சாஸ்திரியார் இயற்றிய நூல்களுள் முக்கியமானவை:— ஹம்ஸ புஷ்பாஞ்சலி ஸ்தவம், ப்ரக்ருதி விலாஸ காவ்யம், ஸ்தவ ரத்னத்ரயம், ஸதீசரிதம், த்ருபுராபரணம், குருராஜஸ்தவம், வைதேஹீ விவாஹம் முதலியன. க்ருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளே மஹாமஹோபாத்யாய பிருதை பெற்றவர்களில் கடைசியானவர்.



